# பகவத் கீதை - நம் நடைமுறைவாழ்விற்காக!

(பகவத் கீதா பார் டம்மிஸ் நூலின் தமிழாக்கம்)

விஷ்ணுவர்த்தனன் மூர்த்தி

அர்பணிப்பு,

உயர்கடவுள் – அவன் படைக்கிறான், அவன் காக்கிறான், அவன் அழிக்கிறான், மற்றும் அவனே எழுதுகிறான்!

# முன்னுரை!

பகவத் கீதை - சிலருக்கு இது ஒரு வாழ்க்கை அறிவியல், சிலருக்கு இது ஒரு கர்ப்பனை காவியம், சிலருக்கு இது ஒரு இந்து மத தலை நூல், இன்னும் எத்தனையோ பார்வைகள்! "ம்" ஒவ்வொருவரும் தங்களுக்கு சாதகமான மற்றும் விருப்பமான முறையில் பகவத் கீதையை பார்க்கின்றனர். இங்கு எத்தனையோ புத்தகங்கள் பகவத் கீதையை பற்றி ஞானிகளாளும், பண்டிதர்களாளும் எழுதப்பட்டிகின்றன, இங்கே உங்கள் முன்னால் இன்னும் ஒரு புத்தகம், ஒரு சாதரண மனிதனால் எழுதப்பட்டது! 500 கோடிக்கும் அதிகாமன மக்கள் வாழும் இந்த உலகில், தான் யார் என்று அடையாளம் தேடிக்கொன்றிருக்கின்ற சாதரண மனிதனான நான், அந்த கீதையை படிக்கும்பொழுது புரிந்துகொண்ட உண்மைகளையும், அதன் பொருளையும் உங்கள் முன் இந்த புத்தகமாக தருகின்றேன்.

ஏன் நான்? இது தான் என் முதல் கேள்வி இந்த பயணத்தில், "இது என் கடமை" என் மனம் சொன்னது, இதோ உங்கள் முன்னால் இந்த புத்தகத்துடன் நிற்க்கிறேன்!இந்த பரந்த உலகின் ஒரு மூலையில் பிறந்து வளர்ந்த எனக்கு, என் பெற்றோரும் என் ஆசிரியர்களும், கீதையை ஒரு உயரிய புனித நூல் என அறிமுகம் செய்தனர்.பிறப்பின் வழியிலோ அல்லது வளர்ப்பின் வழியிலோ நான் அத்தனை இந்து மதத்தின் அடிப்படையை அறிந்தவன் அல்ல, ஆனாலும் என் பிறப்பிற்கு ஒரு காரணம் உண்டு என்று நம்புகின்றவன் நான், என்னை போலவே உங்களில் பலரும் நம்பலாம் இங்கே!

வாழ்வின் சூழ்நிலைகள் மற்றும் ஏற்ற தாழ்வுகள், என்னை ஒரு உயரிய சக்தி இந்த உலகை ஆள்கிறது அதனை தவிர வேறொன்றும் இல்லை என நம்பவைத்தது, அந்த நம்பிக்கையுடன் வாழ்வை தினமும் வாழ்கிறேன்!கீதையை நான் படித்தது, அந்த உயரியகடவுள் எனக்ககா, உங்களுக்காக மற்றும் மனித இனத்திற்கு சொன்னது என்ன என்று புரிந்துகொள்ளவே! கீதையை என் சுயமனதுடன் படித்து அதன் சொற்களின், வரிகளின் பொருளரிந்து, என்னை போன்ற சாதரண, நடுத்தர மக்களுடன் பகிர்ந்துகொள்வதை என்னுடைய உரிமையாகவும் (நானும் அந்த உயரிய கடவுளின் அங்கமாக இருப்பதனால்)மற்றும் கடமையாகவும் கருதுகிறேன்.

கீதை பூஜா அறையில் அல்லது உங்கள் நூலகத்தில் சேமித்து வைக்க அல்ல. நமக்கு புரிந்து, நமது இயல்பான வாழ்க்கையை வாழ, நமது கடமையை செய்ய,கடவுள் நமக்காக கீதையை கூறினார்! (துறவிகள் விளக்கங்கள் கொடுக்க முடியும், ஆனால் அவர்கள் இந்த உலகில் அடைய ஒன்றும் இல்லை, அவர்களின் விளக்கங்களும் நம் அறிவுக்கு மேலாகவும் அமைந்துவிடுகின்றது) கடவுள் கீதையை தனது கடமையை செய்ய, ஒரு போர்வீரனுக்கு கூறினார் (ஒரு துறவிக்கு அல்ல)!

வாருங்கள் நமது அனுபவத்தை ஆரம்பிக்கலாம்!

# அத்தியாயம் 1 : அர்ஜூனனின் வருத்த நிலை

சுருக்கமான பின்னணி:

பகவத் கீதையை துவங்குவதற்கு முன், எதற்காக மற்றும் எங்கிருந்து வருகிறது என புரிந்து கொள்வோம். பகவத் கீதை, காவியமான மகாபாரதத்தில் ஒரு பகுதியாக உள்ளது. இதில் கடவுள் உச்ச ஆளுமையுடைய "கிருஷ்ணன்" என்ற வடிவம் எடுத்து உலகில் பிறந்தார். இந்த அவதாரத்தில், கடவுள் மனித வடிவத்தில்கடவுள் தன்மையுடன் அவதரித்தார். மகாபாரதம், ஒரு அரச குடும்பம் பற்றிய கதை, இதில் அரசாட்சியில் தங்கள் உரிமையை நிலை நாட்ட இரு சகோதர குடும்பங்கள் போராடுகின்றனர் , சிலர் நேர்மையுடனும் மற்றும் சிலர் பேராசையுடனும். இந்த காவியத்தில் நாம் இன்றளவும் சாதாரண வாழ்வில் நம்முடன் பார்த்து கொண்டிருக்கும் மனிதர்கள் மற்றும் அவர்களின் குணதிசயங்களை காணலாம். கௌரவர்கள் (தவறான எண்ணத்துடன்) மற்றும் பாண்டவர்கள் (உரிமையுள்ள எண்ணத்துடன்) தங்கள் உரிமையை நிலை நாட்ட போர்களத்தில் எதிர் எதிரே நிற்கின்றனர். அவரவர் வேண்டியபடி, கௌரவர்கள் கிருஷ்ணனின் படை வீரர்கள் உடனும், பாண்டவர்கள் கிருஷ்ணனுடனும் போர்களத்தில் நிற்கின்றனர்.

பாத்திரங்கள்:

கிருஷ்ணா: அவர் கடவுளின் உச்ச ஆளுமை வடிவம். நாம் உச்ச சக்தி அல்லது உயர்கடவுள் என்று அழைக்க முடியும். அவர் பாண்டவர்களின் மற்றும் கௌரவர்களின் தாய்மாமன். அவர் பெற அல்லது போரில் இழக்க ஒன்றும் இல்லை (ஏன் என பின் வரும் அத்தியாயங்களில் பார்க்கலாம்)
அர்ஜுனன்: அவர் தலைசிறந்த வில்வித்தை வீரன் மற்றும் பாண்டவர்களில் ஒருவன். அர்ஜுனன் மற்றும் கிருஷ்ணன் இடையேயான உறவு, மிகவும் நெருக்கமாகன ஒன்று. அது தூய காதல், பாசம் மற்றும் மரியாதை வடிவில் உள்ளது.
"நமது வாழ்க்கை: நாம் எப்போதும் அன்பை, ஒரு வடிவமோ அல்லது வண்ணமோ அல்லது வகைப்படுத்தியோ பார்க்காமல் இருக்கின்றோமா? .... இல்லை,எப்போதும் நாம் ஒரு நண்பர், அக்கா, அம்மா, மாமா, மனைவி, மகள் போன்ற சில வடிவத்தில் கொண்டுவந்து, ஒப்பிட்டு மற்றும் வகைப்படுத்தவும் செய்கிறோம்,நம்மால் வடிவம் இல்லாமல் ஒரு அன்பை ஏற்க முடியாது ... சாதாரண மனிதன் தன் வாழ்க்கையில் ஒப்பிட்டு பார்க்காமல் மூளையில் ஒரு விஷயத்தை பதிவு செய்ய இயலுவதில்லை.
அர்ஜுனன் வேறு யாரோ அல்ல, நினைவில் வையுங்கள், "அவர் நீங்கள் தான்",மற்றும் அவர் கிருஷ்ணன் முன்னால் நம் சார்பாக நின்றார். இதை வாசிக்கும் ஒவ்வொரு மனிதனுடனும் கடவுள் பேசியிருக்கிறார், இங்கே நீங்கள் தான்அர்ஜுனன். கீதை மனித இனத்திற்காக மட்டுமே சொல்லப்பட்டுள்ளது! கூடுதலாக, பிற உயிரினங்களுக்காக (மனிதர்கள் அல்லாமல், விலங்குகள்,பறவைகள், தாவரங்கள், முதலியன) கடவுள் எந்த வடிவில் வந்து என்ன சொன்னார் என்பது நாம் அறிந்து இல்லாத ஒன்று. இதேபோல், கீதையில் இலக்கணம் எப்போதும் ஆண்பால் உடனே வரும்; எனினும், பெண்கள் படிக்கும் போது தகுந்த இலக்கணத்தை உபயோகிக்க வேண்டும்.
சஞ்சயன்: அவர் விதிவிலக்கான சக்தி கொண்டவர் மற்றும் போர்க்களத்தில் நடக்கும் அனைத்தையும் தன் ஞானத்தால் பார்க்க முடிந்த நபர். அவர் விளக்கி அரசனிடம் கூறியதால் தான் இன்று கீதையில் என்ன இருக்கிறது அல்லது கடவுள் அர்ஜூனனுக்கு என்ன கூறியுள்ளார் என அறியமுடிகிறது, நாம் "தொலை காட்சி/ஒலி சேவை" என்று அவரை அழைக்க முடியும்.

திரிதராஷ்டிரன்: அவர் கௌரவர்களின் தந்தை மற்றும் அப்போதைய அரசர்.அவர் கண் பார்வை அற்றவர், எனவே அவர் போர்க்களத்தில் இல்லை. ஆனால் சஞ்சயர் மூலம், நடப்பதை புரிந்து கொள்ள முயற்சிக்கிறார்.

திறப்பு:

சஞ்சயர் போர்க்களத்தில் என்ன நடக்கிறது என்று திரிதராஷ்டிரானிடம் விளக்குகின்றார். போர்க்களத்தில் இலட்சகணக்கான வீரர்கள் இருபுறமும் வரிசையில் எதிர் எதிரே அணிவகுத்து நிற்கின்றனர். இரண்டு பக்கங்களிலும் மாவீரர்கள் மற்றும் உறவினர்கள் ஒருவரையொருவர் வெற்றிபெற தங்கள் தேர்களுடன் மற்றும் சக்தி மிகு ஆயுதங்களுடன் அங்கே நிற்கின்றனர். "நமது வாழ்க்கை: நான் ஆங்கில படங்கள் நிறைய பார்ப்பதுண்டு, அதனால் நான் இது போன்ற இராணுவ அளவு என்னவாக இருக்கும் என்று 'தி மம்மி, லார்டு ஆப் தி ரிங்க், அலெக்சாண்டர் மற்றும் பல ' படங்களின் காட்சிகளை ஞாபகப்படுத்தி பார்க்கிறேன், ஆஹா ... அது அற்புதமான கற்பனை! ஆனால் அவர்களும் நம்மை போன்ற மனிதர்கள் என்று ஞாபகம் கொள்ளவேண்டும். ஒவ்வொரு வீரனுக்கும் குடும்பம் இருந்தது, ஒவ்வொரு வாழ்க்கையிலும் ஒரு வரலாறு உண்டு. நான் மற்றும் நீங்கள், அந்த வீரர்களில் ஒருவராக வீடு மற்றும் மனைவி, மக்களை விட்டு, ஒரு சில நாட்களில் மீண்டும் வீடு போய் சேர்வோம் என்ற நம்பிக்கையுடன் அங்கே நின்றிருக்கலாம் . நாம் எப்போதும் கதாநாயகனாகவோ அல்லது ஏதிர்நாயகனாகவோ ஏன் நம்மை யோசிக்கவேண்டும், ஏன் ஒரு பக்க நடிகராககூடாது?! "
கிருஷ்ணர், அர்ஜுனனின் தேரோட்டி. ஏன் கடவுள் ஒரு தேரோட்டியாக உள்ளார்?உண்மையில் அவர் மனித இனத்திற்க்கு வாழ்க்கையை கற்பிக்க போகிற போர்க்களத்தில், வாழ்க்கையின் தேரோட்டியாக நிற்கின்றார்!

பழகுநர்ககளுக்கான பாடம்:

அர்ஜுனர் போரில், அவருடன் மற்றும் அவருக்கு எதிராக போரிட போர்களத்தில் யார் உள்ளனர் என்று பார்க்க வேண்டும் என்று கிருஷ்ணனிடம் கோரினார். இது சுயமாக ஒருமுறை தன் மற்றும் எதிரியின் படைபலனை அறிந்துகொள்ளும் செயல். கிருஷ்ணர் களத்தின் மையத்திற்கு தேரை எடுத்து சென்று, அவரது இருபுறமும் அர்ஜுனனின் இராணுவம் மற்றும் அவரது எதிர்ப்பாளர்களை பார்க்க முடியும் என்று அர்ஜுனனிடம் கூறினார்.
"நமது வாழ்க்கை: நாம் இந்தியா-பாகிஸ்தான், அமெரிக்கா- ரஷ்யா அல்லது நாம் மற்றும் பணியிடத்தில் ஒவ்வாத ஒருவரையோ அல்லது பக்கத்து வீட்டுக்காரரையோ கற்பனை செய்து நாம் நல்லவர்கள் மற்றவர்கள் தான் நம் எதிரிகள் என்று கற்பனை செய்வதை விட்டு, ஒரு பக்கத்தில் என் தூய்மையான எண்ணங்கள், எதிர் முனையில் என் தூய்மையற்ற எண்ணங்கள், இன்று கடவுள் அவற்றுக்கு இடையே மனத்தேரினை நிறுத்தி, என்னை இருபுறமும் பார்க்க கேட்கின்றார் என்று கற்பனை செய்ய நமக்கு தைரியம் இல்லை. இன்று முழு மனதுடன் முயற்சி செய்வோம்!
நம் அனைவருக்குள்ளும் மூன்று நிலையில் செயல் புரியும் அமைப்பு உள்ளது, 1) புற செயல் அமைப்பு - அது அவன் / அவள் வாழ்ந்த சூழல் அடிப்படையில் பழக்கமாக்கப்பட்டது , இது ஒரு சூழ்நிலையில் நல்ல அல்லது கெட்ட வழியில் உடனடி பதில்/செயல் தரக்கூடியது, இது "உயிர் வாழும் வேட்கை " அமைப்பு 2) உள் செயல் அமைப்பு - "திட்டமிடல்" அமைப்பு, மனம் மற்றும் இதய அடிப்படையாக கொண்ட, பகுப்பாய்வுப் பிறகு பிறந்த நல்ல மற்றும் மோசமான நீண்ட நின்று விளைவு கொடுக்கும் எண்ணங்கள், இங்கு பிறக்கின்றன. (நாம் அனைவரும் நம் மனதில் & இதயத்தில் நம்முடன் எப்பொழுதும் பேசிக்கொண்டிருக்கிறோம், ஆனாலும் உடலமைப்பின்படி "இதயத்தால் பேச /

நினைக்க முடியாது" - ஆனால் அதை ஒரு " மூளையின் தூய்மையான எண்ணத்திற்கு மற்றும் காதல், பாசம், இரக்கம் போன்ற் உண்மையாக சிந்தனைகளை குறிப்பிட உபயோகிக்கின்றோம்" 3) மீத்துய்மையான ஆழ் மன செயல் அமைப்பு: நாம் மிக அரிதாக தொடர்பு கொள்ளும் ஆன்ம அமைப்பு. இது நன்மை, கொடுமைகளுக்கு அப்பாற்பட்டது, யாராலும் மாற்ற முடியாதது.நிலையான நடைமுறைகள் (எ. கா: யோகா / தியானம் / சுய உணர்தல்) மூலம் இதனை நாம் தொடர்பு கொள்ளலாம். இது எந்த நேரத்திலும் "நாம் சரியான வாழ்க்கையை வாழ்கிறோமா?!" என்று சொல்லக்கூடியது!

இப்போது, கற்பனைக்கு திரும்பி வருவோம். தற்போது நாம் நம்முடைய செயல் அமைப்புகள் மற்றும் அதில் உள்ள நல்ல மற்றும் கெட்ட எண்ணங்களை தூய்மையான ஆன்மாவின் கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டும். "

அர்ஜுனனால் தன் இருபுறத்திலும் அவரது மாமா, முன்னோர்கள், ஆசிரியர்கள் மற்றும் நலம் விரும்பிகளை மட்டுமே பார்க்க முடிந்தது, அவன் மனம் உறவு,இணைப்பு மர்றும் மரியாதை ஆகிய உணர்வுகளால் குழம்பி இருந்தது, தனது உண்மையான எதிரிகள் யார் என்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவன் சொன்னதாவது, எனக்கு இந்த மூன்று உலகங்களை கொடுத்தாலும், நான் அதை அடைய அவர்களை கொல்ல மாட்டேன் என்று கிருஷ்ணணிடம் கூறுகிறான். நான், அவரது சொந்த மக்களை கொன்றுவிட்டு ஏதாவது சாதிக்க வேண்டும் என்ற பேராசைக்காரன் இல்லை, அதானால் வரும் பாவம், என்னை மட்டும் அல்லாது என் சந்ததியையும் விடாது என்று கூறினான் .

ஒரு பொதுவான நபராக நாம் சொல்லலாம், அர்ஜுனன் மிகவும் நல்லவன் அவன் நிலத்திற்காக அவனது குடும்பத்தினரை விட்டுக்கொடுக்க தயாராக இல்லை. கூடுதலாக, அர்ஜுனன் சமாதானமாய் செல்லத் தானே முயல்கிறான் அதில் தவறு ஒன்றும் இல்லையே?

"நமது வாழ்க்கை: நம்மில் பெரும்பாலானோருக்கு, சமாதானம்/ அமைதி ஒரு முக்கியமான விஷயம் நம்மை பொறுத்தவரை, 'அமைதி' என்பது எந்த மாற்றமும் இல்லாமல் இருக்கும் வாழ்க்கை. இது உண்மையில் எந்த ஒரு புதிய நிலைக்கும்அல்லது முடிவெடுக்கும் நிலையிக்கும் செல்லாமல் அப்படியே வாழ்வது. உண்மையில் நாம் இந்த அமைதிக்காக பல முறை நம் சூழலில் நடப்பவைகளை மற்றும் நம் சுயத்துடன் நடக்கும் செயல்களை அறியாதது போல் இருக்கிறோம். நாம் சமூக பாகுபாடு, பாரபட்சம், குடும்ப அல்லது எந்த அளவில் நடக்கும் தவறுகளுக்கும் எதிராகவும் நமது குரலை உயர்த்த வேண்டாம் என்று வாழ்கிறோம். நாம் அமைதியாக வாழ செய்யும் இந்த சமாதான வழி உண்மையில் "அறியாமை" என்று அழைக்கப்படுகிறது. நாம் நம் வாழ்க்கையில் முடிவுகளை எடுக்க விரும்புவதில்லை, ஏனெனில் நாம் அதை செய்யாதிருப்பதின் மூலம் எதையும், நம் வாழ்க்கையில் எதையும் (இணைப்பு &உறவு) இழக்க விரும்புவதில்லை. இதே போன்று தான் அர்ஜுனனும் உணர்ந்திருந்தான்.

அர்ஜுனன் கிருஷ்ணனிடம் சொன்னதாவது, இது போல் என் சொந்த மக்களை கொலை செய்து அத்தகைய பாவத்தை பெற்று, என் குடும்பத்தில் அனைத்து உறுப்பினர்களும் பாதிக்கும்படி செய்யாமல், எந்த கவசமும் இல்லாமல் போர்க்களம் சென்று கௌரவர்களின் கையால் மடிவதே சரி என்று கூறி அவன் தனது வில்லை கீழே போட்டு தேரிலே அமர்ந்து விட்டான்.

அர்ஜுனன் எது நல்லது எது கெட்டது, எது தனக்கு பாவத்தை தரும் என்ற முடிவுக்கு வந்துவிட்டான், அவனுடைய அறிவு எந்த அளவோ அதனை பொறுத்து,அவன் நன்மை எது, தீமை எது என முடிவு செய்தான்.

"நமது வாழ்க்கை: மனிதன் ஒரு செயல்பாட்டின் முடிவை நல்ல மற்றும் மோசமானது என்று வகைப்படுத்துகிறான் என்றால், அவன் வாழும் சூழல், சமூகம், மற்றவரின் பார்வை, கோட்படுகள் இவற்றை கொண்டு முடிவு செய்கிறான். மனித கண் எப்படி ஒரு குறிப்பிட்ட அளவு தான் பார்க்க முடியுமோ,அதே போல் அவனது விதிகள் அவனது

இடத்திற்கு நெருக்கமான விஷயங்களை அடிப்படையாக கொண்டு மட்டும் அமைந்துவிடுகிறது. நாம் நமது வெறுமையான கண்ணால் ஒரு நுண்ணுயிரியை பார்க்க முடியாது, அதனால் அங்கே ஒன்றும் இல்லை என்று அர்த்தம் இல்லை! நாம் திரைப்படம் பார்க்கும் போது உணர்ச்சிமிகுகிறோம். நமக்குத் தெரியும் அது உண்மையான நிகழ்வு அல்ல என்று இருப்பினும், மனிதன் அவன் உணர்வுகள், பிரமைகள் மற்றும் ஆசைகள் மூலம் இயக்கப்படுகிறான் பெரும்பாலான் நேரத்தில்! மனிதன் நினைக்கிறான், தானே சிறந்தவன் என்றும், அவன் சரி எது தவறு எது என்று அறிந்தவன் என்று! உண்மையில் அவன் தான் யார் என்றும் அவன் நோக்கம் என்ன என்று தெரியாமலே தன் வாழ்வையே முடிக்கிறான்! அர்ஜுனன் போல,நாமும் சரி/தவறு, நல்லது / கெட்டது என்ன என்று நமது அறிவுக்கு எட்டியவாறு, நமது பகுதியில் / மதம் / சமூகம் / நம்பிக்கை ஆகியவற்றை அடிப்படியாக கொண்டு முடிவெடுக்கிறோம், அதே வேறு ஒரு பகுதியில் / மதம் / சமூகம் / நம்பிக்கையை பொறுத்து , இவற்றின் வரைமுறைகள் வித்தியாசப்படும்"

# **அத்தியாயம்** 2 : அறிவு யோகா

அர்ஜுனன் தனது வில்லை கீழே வைத்து உட்கார்ந்துவிட்டதால், கிருஷ்ணன் அவனிடம் பேசினார். கிருஷ்ணன் சொன்னதாவது, ஒரு போர்வீரன் தனது கடமையை செய்ய வேண்டும், இந்த கடினமான சூழ்நிலையில் இந்த பலவீனத்தை எங்கிருந்து கொண்டு வருகிறய், என அர்ஜுனனிடம் கேட்டார். கிருஷ்ணன் மேலும் கூறினார், உனது இந்த செயலால் நீ சொர்க்கமோ அல்லது எந்த புகழையோ அடைய முடியாது, எனவே பலவீனம் விட்டு, உன் கடமையை செய். அர்ஜுனனோ, எனது நெருங்கிய மற்றும் அன்பானவர்களை கொள்ளமுடியாது, என கூறிவிட்டு அமைதியானன்.

"நமது வாழ்க்கை: அர்ஜூனனின் பலவீனம் இணைப்பு மற்றும்அறியாமையினால் பிறந்த பயத்தினால் வந்தது, அது போலவே தான் நம் பலவீனம், நாம் அனைவரும் எந்த இணைப்பையும் இழக்கவிடாமலும், அதனால் பயத்தையும் தருகிறது. இது கார், உறவு, வீடு அல்லது ஏதாவது ஒன்று - நாம் எதையுமே இழக்க விரும்பவில்லை. நாம் எதிர்பாராத எதற்காகவும் தயாராக இல்லை. நம் வாழ்க்கை முழுவதும் நமக்கு சாதகமான நிலை வேண்டும். எப்போதும் சாதகமான நிலைமைகளை தர நாம் கடவுளிடம் வேண்டுகிறோம். மற்றும் உண்மையில், நாம் ஒரு சாதகமற்ற நிலையில் அல்லது ஒரு நிகழ்வை எப்படி எதிர் நோக்குவது என்று தெரியாது வாழ்கிறோம். நமது பெற்றோர்கள் நம் வாழ்வில் மரணத்தையோ அல்லது மோசமான சூழலை எதிர்கொள்ள நமக்கு கற்று தரவில்லை, ஆனால் அவர்கள் சாதகமான நிலை எப்போதும் இருக்க பிரார்த்தனை செய்ய மட்டுமே கற்று தந்துள்ளனர். அடிப்படையில் நாம் இழப்பு மேலாண்மை பற்றி கற்றுகொள்வதே இல்லை, எனவே ஒரு கடினமான சூழ்நிலையில் நாம் அனைவரும் மிகுந்த மன அழுத்திற்கும், செயலற்ற நிலைக்கும் செல்கிறோம் (எல்லாம் இங்கிருந்து எடுக்கப்பட்டன, ஒரு நாள் அவற்றை இங்கேயே விட்டு செல்லவேண்டும்)

அர்ஜுனன் பேசக்கேட்ட பிறகு, கிருஷ்ணன் சிரித்துவிட்டு பேசிய வார்த்தைகள் உயிருள்ள மற்றும் உயிரற்றவைகளின் அடிப்படையாக இந்த உலகம் மற்றும் பிரபஞ்சங்களின் ஆதராமாக விளங்கப்போகின்றது.

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், நீ எதற்காக வருத்தப்படுவது கூடாதோ அதற்காக வருத்தப்படுகிறாய். மனிதன் தினசரி ஆடையை மாற்றுவது போல்,ஆன்மாவும் தான் இருக்கும் உடலை மாற்றிக்கொள்கிறது. ஒரு காலக்கட்டத்தில், உடலுடன் இந்த உலகத்தில் பிறந்த ஆன்மா, மரணம் மூலம் அந்த உடலைவிட்டு போய்விடும், மீண்டும் புதிய உடல் எடுத்து மறுபடியும் பிறக்கும்.

"நமது வாழ்க்கை: நம் அனைவருக்கும் தெரியும், ஒவ்வொரு நாளும் புதிய செல்கள் பிறந்து பழைய செல்கள் நம் உடலில் இறக்கின்றன. பிறப்பு மற்றும் இறப்பு நம் மூளை, இதயம், கையில் மற்றும் எல்லா இடங்களிலும் நடைபெறுகிறது. இருப்பினும், நமக்கு அது தெரியாது! ஏனென்றால் இது உயர்கடவுளினால் கவனிக்கப்படுக்கிறது, நம்மால் இல்லை. நம்மில் பலருக்கு,இது அறிவியல்! (உங்கள் நண்பர் அல்லது மனைவி, நீ நேற்று போல் இல்லை என்று கூறுகிறார் என்றால், இப்போது, நீங்கள் புன்னகையுடன் ஏற்று கொள்ளலாம்) "

கிருஷ்ணன் மேலும் அர்ஜுனனிடம் கூறினார், ஞானமுடையோன் இன்பம் மற்றும் வலியை ஒரே அளவில் ஏற்கிறான், உடல் அழிந்துவிடக்கூடியது அதனை பாதுகாக்க முடியாது, ஆனால் ஆன்மா அழிவற்றது யார் ஒருவராலும் அதற்கு அழிவு ஏற்படுத்தமுடியாது.

"நமது வாழ்க்கை: ஒரு விவசாயி செடியில் இருக்கும் ஒரு மலர்கின்ற அழகு மலரை நீக்க கூடாது என்று நினைத்தால் கூட, அந்த மலர் தானாக வாடிக் கருகிவிடும், அதே அந்த ஆன்மாவை அழிக்கவேண்டும் என்று நினைத்தால் அது இயலாத ஒன்று, அந்த ஆன்மா அடுத்த பிறப்பு எடுப்பதை மனிதனால் தவிர்க்கமுடியாது, அது அவனது அறியாமையே ஆகும்.எனக்கு ஒரு கேள்வி தோன்றியது, உலகில் மனிதர் எண்ணிக்கை 10000 ஆண்டுகளுக்கு முன் சில ஆயிரக்கணக்காக மட்டுமே

இருந்தது, ஆனால் இன்று எப்படி 500 கோடி மக்கள்உள்ளனர். இந்த புதிய ஆன்மாக்கள் வந்தது எப்படி? 500 கோடி ஆன்மாக்கள் புதிதாக உண்டானதா? ... அடடா ... இல்லை ... எனக்கு பதில் கிடைத்தது,ஆன்மாக்களின் எண்ணிக்கை விலங்குகள் மற்றும் தாவரங்களை உள்ளடக்கியது, நாம் கோடிக்கணக்கில் அவற்றை அழித்துவிட்டதால், அவை நமக்கு ஒரு பாடம் கற்பிக்க நம்மிடையே பிறந்துள்ளன."

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார்; யார் ஒருவன் ஆன்மாவை கொல்ல நினைக்கிறானோ அது அவன் அறியாமையே ஆகும். ஆன்மா புதிதாக உருவாக்கப்பட்டவோ மற்றும் அது அழிக்கப்படுவதோ இல்லை. ஆனால் அவை ஒரு உடலுடன் இணைக்கப்படுவது அவை சுமந்து செல்லும் நன்மை , பாவங்களை, ஆசை போன்றவற்றை அடிப்படையாக கொண்டது. அதனை பொறுத்து ஆன்மா அதற்கேற்ற உடல் / வடிவத்தை (விலங்கு / தாவரம் / மனிதன் போன்ற) ஆன்மா எடுக்கிறது, ஆனால் எந்த ஆன்மா உயர்கடவுள் மட்டுமே இலக்கு என்று வாழ்கிறதோ, அது மீண்டும் பிறப்பதில்லை, அது கடவுளை அடைகிறது. ஆன்மாவை எரிக்கவோ/வெட்டவோ அல்லது எந்த வகையிலும் அழிக்க முடியாது. இந்த உண்மையை நீ உணர், உடல் மட்டுமே அழிக்கப்படுகிறது ஆன்மா அல்ல. இங்கு பிறந்து எதற்கும் மரணம் நிச்சயம். இங்கு இறந்த எதற்கும், பிறப்பு நிச்சயம், இதிலிருந்து மீள்வது உயர்கடவுளை சரணடைவதன் மூலம் மட்டுமே!

"நமது வாழ்க்கை: நாம் அனைவரும் நாம் ஒரு நேரத்தில் இறக்க போகிறோம் என்று அறிந்தே உள்ளோம், ஆனால் அது சாம், ஜான், அல்லது ரகு ஆகியோருக்கு வேண்டுமானால் அருகில் இருக்க முடியும், ஆனால் எனக்கு அருகே இருக்க முடியாது இப்படி யோசித்து நாம் மகிழ்ச்சியாக இருக்கிறோம். நாம் எப்போதும்70 ஆண்டுகளுக்கு குறைந்தபட்ச வாழ்வோம் என்று நம்புகிறோம். அது சரி இந்த உத்தரவாதம் அளித்தது யார்? அப்படியே இருக்கட்டும் ... இந்த உத்தரவாதம் கொண்டு, நாம் என்ன செய்வது? நாம் பொறியியல் அல்லது எம்.பி.ஏ. அல்லது சி.ஏ படிக்க வேண்டும், பெரிய சம்பளம், 1 அல்லது 2 வீடுகள் வாங்க மற்றும் கடன் தவணை செலுத்தவேண்டும், (முழுமையாக அது அடைந்தவுடன், நாம் அடுத்த கடன் வாங்கவேண்டும்) 1 அல்லது 2 குழந்தைகள், பள்ளிகள் தேடல், கல்லூரி இடங்களுக்காக ஓடுதல் , ஓய்வூதிய திட்டம், நல்ல நான்கு சக்கர வாகனம், மற்றும் மகன் அல்லது மகள் நகரம் / நாடு தாண்டி தொலைவில் தங்கியிருக்க, ஒரு மூத்த குடிமக்கள் திட்டத்தில் வைப்பு பணம் மற்றும் ஒரு நாள் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு மரணத்திற்காக காத்திருக்கப்போகிறோம்! (பெரும்பாலானோர் இந்த நிலையில் உணர்கிறார்கள், தாம் வாழ்ந்தது ஒரு வாழ்வே அல்ல, மீண்டும் வாய்ப்பு கிடைத்தால் வாழலாம் என்று) இந்த வாழ்க்கையைத் தான் 400 கோடிக்கும் அதிகமான மக்கள் வாழுகின்ன்றனர்,இதே போலத் தான் நம் முன் இருந்த சந்ததியினரும் வாழ்ந்தனர்... அதனால், நாம் யார் ? உங்களுக்கு தெரியுமா, 25 ஆண்டுகளுக்கு முன் ஏதோ ஒரு பங்களாவில் (தாதரில்) மும்பையில் வசித்த ஒருவரை , அல்லது கி.பி. 1247 ல் ராஜஸ்தான் அரண்மனையில் வசித்த ஒருவரை ... நாம் வாழ்க்கையில் நமது நோக்கம் என்ன என்பது நமக்கு தெரியாது... உண்மையில் தெரியாது! எனினும், நாம் அனைவரும் இந்த உடல் எங்களுடன் குறைந்தபட்ச 70 ஆண்டுகள் இருக்க வேண்டும் என்று விரும்புகிறோம் . என்ன செய்யவதற்காக?... நான் ஒரு வரலாற்று பெருமை மிகு அல்லது ஒரு பிரபலமான நபராக இருக்க வேண்டும் என்று சொல்லவில்லை ... நமக்குத் தெரியுமா, எத்தனை நூல்களை மற்றும் மொழிகள் இங்கே அழிந்தன,எத்தனை பெரும் மக்கள் வரலாற்றில் சுவடில்லாமல் போனார்கள் என்று, நாம் கி.மு 12000 ஆண்டு வாழ்ந்த யாரையும் அறிந்துள்ளோமா, இல்லை ... வரலாறுமற்றும் புகழ் கூட நேரம் செல்ல இவ்வுலகை விட்டு செல்லும். எனவே நாம் அறிந்து வாழ வேண்டியது, இந்த உடல் நமக்கு சொந்தமானது அல்ல என்பதும்,உயர்கடவுளை தவிர வேறொன்றும் நிலையானதல்ல என அறிந்து நம் ஆன்மாவை அதனிடம் அடைக்களம் அடைய வழிபடவேண்டும். அதன் அர்த்தம் இதுவல்ல, நாம் நம் கடைமையை செய்யக்கூடாதென்று, ஆனால் இந்த உலக

விஷயங்களிலும், பொருட்களிலும் நம்மை அளவிற்கு அதிகமாக இணைத்துவிடக்குடாது( நம்மால் சுயத்தை உணர்ந்து உலக பொருட்களிலிருந்து,எந்த கணமும் நம்மை பிரிக்ககூடிய நிலையில் வாழ்வது)"
கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், ஒரு போர்வீரனின் கடமை போர்க்களத்தில் போராட வேண்டியது, அவனது கடமையை நிறைவேற்றாததன் மூலம் அவன் பாவம் அடைய நேரிடும் என்பதே நியதி. உலகமோ, அதன் மக்களோ தனதுகடமையை நிராகரித்து சென்ற வீரனை பாராட்டாது மற்றும் பயத்தினால் அவன் போர்க்களத்தை விட்டு சென்றதாக நினைக்கலாம். இந்த பேராசை பிடித்தோரின் உடல்களை கொல்வதன் மூலம், நீ கடமையை நிறைவேற்றுவாய் மற்றும் உரிமையுள்ள நிலையையும் அடைவாய். கிருஷ்ணன் மேலும் கூறினார், இன்பம் மற்றும் வலி, ஆதாயம் அல்லது இழப்பு, வெற்றி மற்றும் தோல்வி ஆகியவற்றை ஒன்றாகவே கருதி தனது கடமையை செய்யும் ஒருவன் பாவத்தை அடைய மாட்டான், ஏனென்றால் அவன் கடமையை செய்கிறான் மற்றும் முடிவின் பிரதிபலனைப் பற்றி கவலைப்படுவதில்லை.
"நமது வாழ்க்கை: கடமையை செய்வது என்பது நம்மை பொறுத்தவரை, நம் குடும்பம் மற்றும் நம் வேலை என்ற எல்லைக்குள் மட்டுமே. நம் வாழ்வை தவிர,பெரும்பாலானோர் வெளியே நடக்கும் எதை பற்றியும் கவலைப்படுவதில்லை.நம் தேவைகளை நிறைவு செய்வது கடமையின் ஒரு பகுதியாக உள்ளது, ஆனால்அதுவே அனைத்தும் இல்லை. நாம் நமது குரலை வேறு எதற்காகவும் கொடுப்பதில்லை! மன்னிக்கவும், நாம் செய்கிறோம் ... நாம் நாடு, அநீதி / ஊழல் / சமூக தேவைகளை / மாற்றங்களை பற்றி நமது நண்பர்கள், குடும்பத்துடன் உட்கார்ந்து சோர்வடைய பேசுகிறோம், மேலும் நம்மை தவிர வேறு யாராவது வந்து நமக்காக அந்த வேலையை செய்வார் என்றும் உறுதியாக நம்புகிறோம் (நம்மை விட மற்றவர்கள் மீது அதீத நம்பிக்கை , அந்த விஷயத்தில்). நாம் பிரபல சமூக காரணங்கள் பின்னால் சென்று, சாலையில் நாம் மெழுகுவர்த்தி ஏந்தி நடக்க தயாரகிறோம், ஆனால் நாம் நமது அடுத்த வீட்டில் நடக்கிற பாகுபாடை நிறுத்த அடியெடுத்து வைக்க மறக்கிறோம். நாம் எகிப்தில் மற்றும் தில்லியில் நடப்பதை பற்றிப் பேசி ஆவேசப்படுகிறோம் ஆனால் நம் அருகிலுள்ள சமூகம் அல்லது தெருவில் நடக்கும் பிரச்சனையை பற்றி கவலைகொள்வதில்லை. இதற்கு அப்பால், எத்தனை பேர் நமது வீட்டிற்கு வெளியே சூழலை சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என்று நினைக்கிறோம், இது நமது சமூகத்தின் / பொருளாதாரம் / அரசியல் / சுகாதார / சூழலின் சுத்தத்தை பற்றியதும் ஆகும் ... ஆனால் நாம் அனைவரும் கடமை உணர்வுள்ளவர்கள் ... நாம் நமது பேருந்திற்காக, நாம் நமது வேலைக்காக, நமது தூக்கத்திற்காக மற்றும் நம்முடைய அனைத்து தேவைக்காகவும் ஓடுகிறோம் ... ஆனால் நம்முடைய தேவைகளுக்கு மட்டுமே! "
கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், முழுமையை அறிந்த ஒருவன் தன் எண்ணங்களை கிளை விட்டு படர விடுவதில்லை, முழுமையற்ற ஒருவன் அவற்றை படர விட்டு தெளிவற்ற மற்றும் குழப்பமான நிலையை அடைகிறான்.முழுமை உணர்ந்த ஒருவன், இங்கிருந்து எடுக்கப்படும் எல்லாம் ஒரு நாள் இங்கேயே விட்டு போக வேண்டும் என்று அறிந்துள்ளான். அவன் இங்குள்ள அனைத்து உயிரினங்கள் மற்றும் உயிரற்றவைகள் ஒரு காலத்தில் உருமாறி அழியும் என அறிந்து வாழ்கிறான்.
"நமது வாழ்க்கை: நாம் பெரும்பாலான நேரத்தில் கற்பனை உலகில் வாழ்கிறோம். நம் மனதில் எவ்வளவு நேரம் நம்முடன் பேசுகிறோம், நம் மனதில் மற்றவர்களுடன் எவ்வளவு நேரம் பேசுகிறோம் , பேச மட்டும் அல்லாமல் கற்பனை திறன் மூலம் அவர்களின் நடத்தைகள் உருவாக்கி அதற்கு நம் பதிலையும், நடத்தையையும் பிறப்பிக்கின்றோம்! நாம் ஒரு அலுவலகத்தில் / செயலுக்குள் /குடும்பதிற்குள் நுழையும் முன்னே, நாம் நிலைமை என்ன என்று முன்முடிவு செய்கிறோம். நம் நேரத்தை உருவகப்படுத்துதல் மற்றும் கற்பனையிலேயே மிக அதிகம் செலவு செய்கிறோம், இன்னும் பலர் நீண்ட எதிர்காலத்தை உருவகப்படுத்தி வாழ்கின்றனர்... அவர்கள், தங்கள் வாழ்க்கையில் என்ன நடக்கும், எத்தனை பணம்

சம்பாதிப்பேன் என்றுவாடுகின்றனர்... அவர்கள் தற்போதைய வாழ்வையும் வாழ்வதில்லை,எதிர்காலத்தையும் வாழ்வதில்லை. சிலர் கடந்த காலத்தை உருவகப்படுத்தி இப்படி இருந்தால் இது நன்றாக இருந்திருக்கும் என்று கற்பனையில் வாழ்கிறார்கள்! மனம் எண்ணக்கிளைகளை பரப்பி அதில் பயணம் செய்ய வைப்பதில் வல்லது, ஆனால் அந்த கிளைகளை வெட்டி நிகழ்காலத்தில் வாழ மட்டுமே விரும்பி, உயர்கடவுளை பற்றி உறுதியாக அல்லது நமது ஆன்மாவுடன் நம்மை இணைத்து எந்த எதிர்பார்ப்பு இல்லாமல் கடமையை செய்யவேண்டும்!"

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், வேதங்கள் (புனித விதிகள்) கடவுள்தன்மையுடையோரை (சூரியன், சந்திரன், பிற கடவுளர்களை ) அடைய,ஒரு நல்ல வாழ்க்கையை பெற, ஒரு நபரை வழிநடத்த முடியும், ஆனால் யோகி நிலை (சமனிலை) பெற்ற ஒருவன், இதனால் மகிழ்ச்சியடைவதோ,ஈர்க்கப்படுவதோ இல்லை. யோகி நிலையில் வாழும் ஒருவன் சதாரண வாழ்வை தன் சுயத்தைக் கட்டுப்படுத்தி வாழ முடியும். அவன் உயர்கடவுளின் அருள் பெரும்போது, அவன் உலகார்ந்த விருப்பங்களை இழந்து, எந்த இடையூறும் இல்லாமல் கடவுளை அடைகிறான். அந்த யோகிக்கு, வேதங்களால் எந்த உபயோகமும் இல்லை.

"நமது வாழ்க்கை: நம்மில் பெரும்பாலோனுருக்கு வேதத்தின் நோக்கம் மற்றும் அதன் பொருள் தெளிவாக தெரிவதில்லை. யாரோ சிலர் வேதத்தின் பொருளுணர்ந்து கற்று கொண்டு இருக்கலாம், ஆனால் அவர்களை நான் இங்கே குறிப்பிடவில்லை ... நாம் பெரும்பாலான நமது விழாக்களை / சடங்குகளை நோக்கம் தெரியாமல், கடவுளின் மொழி அல்லது விழா மற்றும் இதனால் அவர் என்று சந்தோஷப்படுவார் என நம்பிக்கை கொண்டு வீடு / கோயில் ஆகியவற்றில் செய்கிறோம், ஆனால் நாம் எப்போதும் நம் மனதில் / இதயத்தில் அவரை பற்றி மட்டும் யோசித்து நமது கடமை செய்வது, வேறு எதை விடவும் அதிகமாக அவரை மகிழ்வடைய செய்யும் என்பதை மறக்கிறோம்! எனினும்,நாமோ சடங்குகள் மட்டுமே நமது குடும்பம் மற்றும் நமக்கு சமாதானம் மற்றும் நல்லிணக்கத்தை கொண்டு வரும் என்று நம்புகிறோம். இது எவ்வளவு உண்மையற்றது! மேலும் சில கோவில் / தேவாலயம் / மசூதி போன்ற இடங்களில் சில பெரிய மனிதர்கள் / பணக்காரர்கள் ஆகியோர் முன்னுரிமை மற்றும் பூசாரிகள் இடம் இருந்து சில நல்ல வார்த்தைகள் பெறுகின்றனர், அதை அவர்கள்,கடவுள் அவர்களை ஆசிர்வதித்தாக கருதுகின்றனர். கடவுள் இங்கே ஒவ்வொரு மனிதனுக்கும் சமமாக உள்ளார், அவருக்கும் எந்த ஒரு உயிருள்ள மற்றும் உயிரற்றவைகள் இடையே மத்தியஸ்தர் என்ற தேவை (குரு என்பதின் கருத்து வேறு) இல்லை, எனவே அங்கே அவர்களுக்கு கொடுக்கப்படுகிற முக்கியத்துவம் மனிதனால் தரப்படுகிறதே தவிர, அது கடவுள் அல்ல. முதல் விஷயம், உங்கள் கடவுள் அறிவை பிறப்பித்தவர், அவரை ஏமாற்றி விட முடியும் என் நினைக்க வேண்டாம். இதேபோல், சில கோயில்கள் / தேவாலயங்கள் / மசூதிகள் உயர் நன்கொடைகள் பெறுகின்றன. நாம் உறுதியாக இருக்கலாம், இந்த பணம் பாவத்திற்கான பங்கு பகுதியாக வருகிறதென. பலர் பாவ பங்கை கடவுளிடத்தில் திணித்து , தம் தண்டனையை குறைக்க வேண்டும் என்று வேண்டுகின்றனர்.

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், வெற்றி/தோல்வியில் சமனிலையில் இருப்பது யோகா மற்றும் யோகி நிலை. விருப்பம்/கவலை இன்றி அவனுக்கு கொடுக்கப்பட்ட செயல்புரியும் ஒருவன் உண்மையில் யோகி நிலைக்கு செல்கிறான். அவன் முடிவின் பலனை பற்றி கவலையின்றி உறுதியான நிலையில் கடமையை செய்கிறான். தான் எந்த நிலையில் உள்ளோமோ அந்த நிலையில், சுயத்தில் திருப்தி அடைபவனே, உறுதியான ஞானத்தில் உள்ளவனாவான்!

"நமது வாழ்க்கை: நம்மில் எத்தனை பேர் இன்று வரை நல்ல வாழ்வை வாழ்வதாகவும், என் வாழ்வே சிறந்த வாழ்வு என்றும் கருதுகிறோம்? வெகு சிலர் ... நாம் இன்னும் சிறந்த வாழ்க்கை என வேறு ஒருவர் வாழ்க்கையை பார்கிறோம்,நாம் இன்னும் சிறந்த நபர் என வேறு ஒருவரை பார்கிறோம். நம்மை நிறைவு செய்ய இன்னமும் வேறு ஏதாவது தேவைபடுகிறது. "காஸ்ட்அவே" என்ற திரைப்படம்

ஒரு தீவில் மாட்டி, வேறு வழியின்றி சுய திருப்தி அடைந்த ஒரு மனிதனை காட்டியது. பொருட்களின் மோகம் உங்களை என்றும் விடாது, நீங்கள் தான் பொருட்களின் மீதான மோகத்தை விட வேண்டும் ! நம்மிடையே பலரால்ஒரு போன் இல்லாமல் வாழ முடியாது, ஒரு தொலைகாட்சி இல்லாமல் வாழ முடியாது, நண்பர்கள் இல்லாமல் வாழ முடியாது, ஏதாவது ஒரு இணைப்பு இல்லாமல் வாழ முடியாது, உண்மையில் அவை நாம் யார் என்று சுயமாக இருக்கவிடாமல், நம்மை ஏதாவது ஒன்றுடன் இணைத்து நம்மை உண்மையை மறக்க செய்து அடிமையாக்கிவிடுகின்றன. யார் நாம், நாம் என்ன செய்கின்றோம் இங்கே, என அறிய மிகுந்த மனகட்டுபாடு தேவை ... நாம் நம்மை பற்றி நினைக்க தொடங்கவேண்டும், மனதின் உள்ளிருந்து ...திரும்பவும், சாம் மற்றும் ரகு உங்கள் வாழ்க்கையில் என்ன செய்கின்றார்கள் மற்றும் உங்கள் மனைவி / மகன் / பெற்றோர் உங்களிடம் எப்படி நடந்துகொள்கிறார்கள் என்று நினைத்து வாழாதீர்கள்! ... கடவுளின் படைப்பில் நீங்கள் தான் மிகவும் அழகான படைப்பு மற்றும் கடவுளின் படைப்பில் உங்களை விட புனிதமானது எதுவும் இல்லை! "

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், ஒருவன் உணர்வுகளுக்கு ஆட்படும்போது உலக பொருட்களுடன் இணைகிறான், அதனிலிருந்து ஆசை பிறக்கிறது,நிறைவேறாத ஆசையிலிருந்து கோபம் பிறக்கிறது, கோபத்திலிருந்து மாயை பிறக்கிறது, மாயையிலிருந்து குழப்பம் பிறக்கிறது, மேலும் பகுத்தறிவை இழந்து அழிவை நோக்கி செல்கிறான்.

இந்த பேச்சு தொடரில், நாம் இதே வார்த்தைகளை புனித புத்தர் கூறியதையும் ஞாபகப் படுத்திகொள்ளலாம் ... ஏனெனில் உண்மை என்பது ஒன்றுதான்.

"நமது வாழ்க்கை: இந்த உலகத்தை மூன்று அல்லது நான்கு கடவுளர்கள் உருவாக்கவும் இல்லை மற்றும் ஆட்சிசெய்யவும் இல்லை. இந்த பிரபஞ்சம், மற்ற பிரபஞ்சங்கள் மற்றும் நுண்ணுயிர்கள் முதல் அணைத்தையும் பராமரித்து வருகிறது ஒரு தலையாய சக்தி. கூடுதலாக, அந்த தலையாய சக்தி கிருஷ்ணன் ! நான் இப்படி சொல்ல போகிறேன் என நீங்கள் நினைத்தால், நிச்சயம் இல்லை! இது நபி, இயேசு அல்லது எந்த பெயருடனும் இருக்க முடியும், ஆனால் ஒருஉயர்கடவுள் உண்டு என்பது மட்டும் உண்மை. என் பிராந்தியத்தில் (மதம் அதன் தொடர்புடையது), நான் கிருஷ்ணன் என்ற வடிவத்தில் நம்பிக்கை கொண்டுள்ளேன், நான் அவரை உயர்கடவுள் என அழைக்கிறேன், ஆனால் சவுதி அல்லது இத்தாலியில் பிறந்திருந்தால், நான் வேறு பெயரில் அவரை அழைத்திருப்பேன். கிருஷ்ணன் கடல் கடந்து ரோம் சென்றதாக இல்லை, அல்லது நபி நியூசிலாந்து சென்றதாக, அல்லது இயேசு வியட்நாம் சென்றதாக இல்லை. மதம் மற்றும் சடங்குகள், பிராந்தியம் மற்றும் கால நிலைமைகள் பொறுத்து பிறந்தது. ஆயினும் இதற்கு கடவுள் இல்லை என்று அர்த்தம் இல்லை. ஒரு உச்ச சக்தி, நம் கற்பனை மற்றும் அறிவுக்கு அப்பாற்பட்டு இந்த உலகை இயக்குகிறது. மனிதனின் பரிதாபம் என்னவென்றால், அவனால் புரிந்துகொள்ளமுடியவில்லையென்றால் அது உண்மையானது இல்லை என்று நம்புவதுதான். எடிசன் மின்சாரத்தை கண்டுபிடித்து நிருபிக்கும்வரை பழைய தலைமுறை அவரை ஒரு முட்டாள் என்றே நினைத்தது, ஆனால் இப்போது மின்சாரம் சில மதிப்பெண்கள் தரும் பாடமாகிவிட்டது ... நாம் ஏதோ பார்க்க / ஏதோ கேட்க / ஏதோ உணர முடியவில்லை என்பதால், கடவுள் இல்லை என்றாகி விடாது ... இது நமது வரையறை .... மேலும் இது அறிவியலுக்கு அப்பாற்பட்டது ... நம்பிக்கை, அது மட்டுமே அந்த கடவுளை காண ஒரே வழி!

# அத்தியாயம் 3 : செயல் யோகா

அர்ஜூனன் கிருஷ்ணனிடம் கேட்டான், அறிவுசார்ந்த யோகா, செயலை காட்டிலும் மேலானது என்கிறீர்கள், அப்படியாயின் இதை தெரிந்து கொண்டு, நான் ஏன் கொலை செய்ய வேண்டும்? கூடுதலாக, உன்னுடைய உரையில் முரண்பாடு தெரிகிறது, எந்த வழியும் தெளிவாக இல்லை என்று கிருஷ்ணனிடம் தெரிவித்தான். கிருஷ்ணன் அர்ஜூனனிடம் கூறினார், இரண்டு வழிகள் உள்ளன, ஒன்று யோகா அறிவு வாழ்க்கை இரண்டாவது மற்றொரு யோகிகள் நடவடிக்கை பாதையை தொடர்ந்து வாழ்வது. ஒரு செயலை செய்யாததன் மூலமோ அல்லது அந்த செயலை புறக்கணிப்பதன் மூலமோ, நீ செயலற்ற நிலைக்கு செல்லமாட்டாய், மேலும் உண்மையில் இந்த உலகில் எந்த உயிரினமும் செயலற்ற நிலையில் எப்போதும் இல்லை. இயற்கையான குணங்கள் எப்போதும் வேலை செய்துகொண்டே இருக்கின்றன.

உங்களுக்கு ஒன்றை தெளிவுபடுத்த விரும்புகிறேன், இங்கே கொடுக்கப்பட்ட வார்த்தை "யோகா" மூச்சு பயிற்சி அல்லது ஒரு "யோகா வகுப்பு" பற்றி அல்ல. அது ஒரு சமநிலை, இந்த நிலையில் செயல்கள், முடிவுகள் மற்றும் சுற்றி நடப்பவைகளை, சுய நினைவுடன் சமநிலையில் ஏற்று வாழ்வது. இங்கே வார்த்தைகளுக்கு நாம் விளக்கங்கள் தேவைகேற்ப மட்டுமே கொடுக்கப்போகிறோம்.

"நமது வாழ்க்கை: நம்மில் சிலர் ஒரு கணத்தில் நான் இன்று முதல் கடவுளை மனதார வழிபடபோகிறேன் என முடிவு செய்கின்றனர் (ஆமாம், பலர் கடவுளை வழிபடுவதையும், நற்தொண்டு செய்வதையும் நேரத்திற்கு தகுந்தாற்போல் முடிவு செய்கின்றனர்), உடனே பகவத் கீதை போன்ற ஒரு புத்தகத்தை வாங்கி படித்து, தொலைக்காட்சியில் பக்தி சேனல்களை பார்க்க தொடங்கி அல்லது மத கூட்டங்களில் பங்கேற்க துவங்கி, இந்த உலகத்தில் எல்லாம் பொய் எந்த பொருளும் உண்மையல்ல என நினைத்து மிகவும் வித்தியாசமாக நடக்க தொடங்குகின்றனர் மற்றும் கடமையை மறக்கின்றனர், இதனால் அவர்களது குடும்பத்தினர் சலிப்பு மற்றும் சோர்வடைகின்றனர். நம்மில் சில வீடுகளில் கீதையை வைப்பதில்லை, நாம் ஒன்றாக போர்க்களத்தில் கிருஷ்ணன் மற்றும் அர்ஜூனன் உள்ள படத்தை நமது வீடுகளில் வைப்பதில்லை, அது வீட்டில் போர் கொண்டுவரும் என நம்புகின்றோம். உண்மையில் கீதையோ, எப்படி சாதாரண வாழ்க்கையில் சமன்திறன் கொண்டு வாழ்வது என நமக்கு சொல்கிறது, இது ஒவ்வொருவரும் படித்து அறிந்துகொள்ளவேண்டியது. பெரும்பாலானோர்க்கு கீதையின் சாரம்சம் கூட தெரியாது! நம் வாழ்வில் நாம் எதை இழக்க வேண்டும், எதை கட்டுப்படுத்த வேண்டும் என்று தெளிவில்லாமல், சமநிலையில் இல்லாமல், தீவிரமாய் ஒரு செயலை திடீரென செய்வதும் பின் அது ஆகாது என நிறுத்துவதும் நன்மை தராது . நம்மை போலவே அர்ஜூனனும் இந்த நேரத்தில் தன் அரைகுறை அறிவால் குழம்பி நிற்கிறான்."

நம்மில் சிலர் தியானம் செய்ய முயற்சிக்கிறோம், அது ஒரு செயலற்ற நிலை எனக்கருதி. நாம் சாதாரணமாய் கண்களை மூடி செய்யும் தியானம், நம் எண்ணங்களை உடைக்கவும், இரத்த அழுத்தம் குறைக்கவும் அல்லது மன அயர்வை நீக்கவோ ஒரு சில நிமிடங்கள் உதவும். எனினும், நாம் தியானத்தை முடித்தவுடன், நாம் நமது தொலைபேசியை தேடவும், நாம் மெயில்கள் பார்க்கவும், வாக்குவாதம் செய்யவும் ஆரம்பிக்கிறோம், அதாவது நாம் சாதாரண வாழ்க்கைக்கு மீண்டும் வருகிறோம் ... உண்மையில், தியானம் இந்த நிலையில் அவசியமாக அமைகிறது.

அதாவது செயலுடனோ அல்லது அதன் முடிவுடனோ நம்மை இணைக்காமல், கடமையை தொடர்ந்து செய்வது. எந்த ஒரு மனம் இதனை தினசரி வாழ்வில் செய்யவல்லதோ அதுவே உண்மையான தியானத்தில் உள்ளது, 15 முதல் 30 நிமிடங்கள், சில வார்த்தையை கண்ணை மூடி உச்சரித்து மீண்டும் சாதாரண நினைவுக்கு திரும்பி வந்து, அல்லல் படும் மனமல்ல.

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், உணர்வுகளை உறுப்புகள் மூலம் கட்டுப்படுத்துத்துவது சரியான முறையல்ல, ஆனால் மனதின் மூலம் உணர்வுகள் மற்றும் அவற்றின் ஆதார பொருட்கள் மீது கட்டுப்பாடு செய்வதே உயர்ந்த வழி. எவன் ஒருவன் மனதில் மூலம் உணர்வுகளை கட்டுப்படுத்தி அவனது உறுப்புகளை கர்ம யோகாவில் ஈடுபடுத்தி தன் கடமையை செய்கிறானோ அவன் மேன்மையான நிலைக்கு செல்கிறான்.

"நமது வாழ்க்கை: நம்மில் பலர் வெவ்வேறு பழக்கம் கொண்டுள்ளோம், சில பழக்கங்கள் நமக்கே பிடிக்காது, உதாரணமாக, நாம் தினசரி அடிப்படையில் அதிகாலையில் எழுந்திருக்க வேண்டும் என நினைக்கிறோம், ஆனால் நாம் எழ முயற்சிக்கும்போது, ஏன் மற்றொரு 15 நிமிடங்கள் தூக்கங்கூடாது என நினைத்து நாம் உறக்கத்திற்குள் நழுவுகிறோம். இதேபோல், சிலர் புகைபிடிக்கும் பழக்கத்திலிருந்து வெளியேற வேண்டும் என நினைக்கின்றனர், ஆனால் முடிவதில்லை ... இதற்கு காரணம், நம் கட்டுப்பாடுகளை உணர்வுகளின் மீதோ அல்லது உறுப்புகளின் மீதோ விதிக்கிறோம், இதனால் தோல்வி அடைகிறோம். உணர்வுகள் வல்லமையாது ஆனால் மனம் அதை விட சக்தி வாய்ந்தது. மனத்தால் அறிவு கொண்டு ஆராயமுடியும், ஆனால் உணர்வுகளால் அது முடியாது. எனவே, மனதை கட்டுப்படுத்துவது நடைமுறையில் எளிதானது. நம்மில் பலரும் இதனை அறிந்திருப்போம், நம் மனதில் நாம் ஒரு நேரத்தில் எழவேண்டும் என்று நினைத்துவிட்டால், அலாரம் கூட அடிக்கதேவையில்லை நாம் சரியான நேரத்தில் எழுகிறோம், ஆனால் மனதில் பதிய வைக்காவிட்டால், அலாரம் அடித்தாலும் அதை அணைத்துவிட்டு தூங்கிவிடுவோம் ".

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், ஒவ்வொரு நடவடிக்கைக்கும் விளைவுகள்/முடிவுகள் உண்டு, அதனை அர்பணித்து தன் கடமையை செய்ய வேண்டும், எவன் ஒருவன் தன்னுடைய சுயத்தில் திருப்தி அடைகிறனோ, அவனுக்கு எந்த ஒரு செயலாலும் பலனில்லை. அவன் முடிவுடன் மட்டும் அல்லாமல் செயலுடனும் தன்னை இணைத்துக் கொள்வதில்லை. ஆனால் அப்படிப்பட்ட ஒருவனும் தன் கடமையை செய்யவேண்டும். சொர்கம், பூவுலகம் மற்றும் பாதள உலகம், இந்த மூன்றிலும் அடையகூடியது எதுவுமே இல்லாத நானும் என் கடமையை செய்துகொண்டே இருக்கிறேன்.

"நமது வாழ்க்கை: எனக்கு எப்போதும் இந்த கேள்வி உண்டு, உங்களிடமும் அது இருக்கலாம், எதற்காக கடவுள் என்னை பிறப்பித்தார், அவர் என்ன நிரூபிக்க பார்கிறார், நான் இங்கு பிறக்காவிட்டால் நன்றாக இருந்திருக்கும்."ம்", இதுவரை என் மனதிற்கு புரியக்கூடிய வகையில் ஒரு பதில் கிடைக்கவில்லை. கடவுள் இவ்வுலகில் உயிர்களை பிறப்பிக்கிறார், காக்கின்றார் மற்றும் அழிக்கின்றார், எந்த ஒரு இணைப்பும் இல்லாமல், முடிவை எதிர்பார்த்தோ அல்லாமல். ஆனால் இவ்வுலகில் பிறப்பிக்கபட்ட உயிர்களோ தம்மை அனைத்து வித பந்தங்களோடு இணைத்து கொண்டு மகிழ்கின்றன, அதே ஒரு நாள் துன்பம் என்றுணர்ந்து, ஏன் கடவுள் என்னை இங்கே பிறக்கவைத்தார் என்று கேட்கிறோம். என்ன அடைவதற்காக , அவர் என்னை இங்கே பிறப்பிக்கவேண்டும்? ஆனால் அவரோ தான் தன் கடமையை செய்வதாகவும்,

அவர் அடைவதற்கு எதுவும் இல்லை என்றும் கூறிவிட்டார், ஆனால் நம்மாலோ அதை ஏற்க முடியவில்லை. யாரவது பலனின்றி ஒரு செயலை செய்வார்களா? பேசாமல் கடவுள் தன் வேலையை நிறுத்திவிடலாம், இப்படி நமது சிந்தனை. முதலில், நாம் பலனின்றி கடமையை செய்வதை ஏற்கமுடியவில்லை, இரண்டாவது, கடவுள் ஏன் தன் வேலையை நிறுத்தகூடாது என அவருக்கும் அறிவுரை தருகிறோம். கடவுள் நமக்கு பிறப்பு, இறப்பிலிருந்து வெளியே வர, யோகி நிலையில் அவரை மற்றும் உறுதியாக பின்பற்ற, வழியும் சொல்லியுள்ளார். ஆனாலும் நமக்கோ இங்குள்ள எல்லா இன்பத்தையும் அனுபவிக்கவேண்டும் ஆனால் நம் வழியால் நாம் துன்பத்தை அடையும்போது,நாம் கடவுளை கேள்வி கேட்பதோடு அல்லாமல் அறிவுரையும் செய்கிறோம் !

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், ஞானமடைந்த ஒருவன் தன்னை இணைக்காமல் செயல் செய்யவல்லவனாகிறான், ஆனாலும் அவன் தன் ஞானத்தை அதை ஏற்க இயலாத ஒருவனிடம் தரக்கூடாது. ஏனென்றால் அது, அந்த மனிதனின் வாழ்வில் குழப்பத்தை தரும், மற்றும் அவனால் சாதரண வாழ்வை தொடர்வதில் கடினம் ஏற்படும். ஒவ்வொரு உயிரினமும் இவ்வுலகில் அதன் குணாதிசயங்களுக்கு தகுந்தவாறு தன் செயலில் ஈடுபடுகின்றன. உணர்வுகள் அவர்களை கட்டுப்படுத்துகின்றன. ஞானமடைந்தவன் அந்த உணர்வுகளை மேலாண்மை செய்ய அறிந்துள்ளான். மேலும் ஒருவன் மற்றொருவனுக்கு கொடுக்கப்பட்ட கடமையினுள் நுழைந்து அதனை தான் ஏற்க கூடாது, அது ஏற்கதக்கதல்ல. எப்படி நெருப்பை சுற்றி புகை சூழ்ந்துள்ளதோ, அது போல் அறிவை சுற்றி ஆசை சூழ்ந்துள்ளது, எனவே ஞானமுடைய ஒருவன் ஆசையை, உயர்கடவுளினிடத்தில் தன் எண்ணத்தை அர்ப்பணித்து, அல்லது பிறலாது கடமை செய்து யோகி நிலையடைகிறான்.

"நமது வாழ்க்கை: வாழ்க்கையில், நாம் ஒருவருக்கு ஒரு விஷயத்தையோ அல்லது பொருளையோ அவர்கள் ஏற்க கூடிய அளவிற்கு மட்டுமே கொடுக்கவேண்டும். எல்லாரும் எல்லாவற்றையும் ஒரே அளவிற்கு, ஏற்க முடியுமானால், எல்லாரும் ஒரே அளவில் இயந்திரம் போன்றே வாழ்வோம். வழ்வில் தேவை மற்றும் பூர்த்தி செய்தல் இருக்காது. எல்லாரும் மருத்துவராக அல்லது பொறியாளராக இருந்தால் இங்கு வாழ்வு நடக்காது. உலகின் சுழற்சியில் ஒவ்வொருவரும் அவரவர்க்கு ஏற்ற வேலையில் ஈடுபடுகின்றனர். இதில் எவன் ஒருவன் தன் பங்கை உணர்ந்து கடமையாற்றி, இணைப்பின்றி வாழ்கின்றானோ அவனால் மற்றவர்களுக்கு வழிகாட்ட இயலும். ஆனால் மற்றொருவனால் எடுத்துகொள்ளும் அளவிலேயே அந்த ஞானம் கொடுக்கப்படவேண்டும், இல்லையினில் அமைதியற்ற நிலை அதை ஏற்பவன் வாழ்வினில் உண்டாகலாம். ஒரு கட்டிட தொழிலாளி 25வது மாடியில், வானத்திற்கும் தரைக்கும் இடையே தொங்கிகொண்டிருக்கிறான், அவனிடம் சென்று இந்த அறிவை கொடுத்தால் அவனால் ஏற்கமுடியுமா?!..... ஏன் முடியாது, கட்டிட வேலை எனபது அவனது தொழில், அதன் அர்த்தம் அதுவல்ல அவன் ஞானமற்றவன் என்று, இது ஒவ்வொரு மனிதனிலிருந்தும் வேறுபடும். ஆனால் ஏற்க இயலாத ஒருவனிடம் இவற்றை பேசி குழப்பக்கூடாது. அதேபோல் ஒருவர் மற்றொருவருக்காக முடிவு செய்தல் கூடாது, அதுவும் உரிமையென கருதி முடிவு செய்தல் கூடவே கூடாது. இது உங்கள் மனைவி, மக்கள், பெற்றோர் யாராயிருந்தாலும் சரி! அது போன்ற உரிமையை கடவுள் யாருக்கும் தரவில்லை. பெரும்பாலானோர் தன் சுய வாழ்வில் முடிவெடுக்கமுடியாமல், தன்னை சார்ந்தவரின் வாழ்விற்காக முடிவெடுத்து பரிசீலிகின்றனர். நாம் ஒருவருக்கு வழிகாட்டலாம், உறுதுணையாக இருக்கலாம், ஆனால் அவர்களுக்காக முடிவெடுப்பதோ அல்லது அவர் கடமையை நாம்

செய்வதோ, பாவமாகும். இன்னும் ஒரு நிலையில், ஒரு நாட்டிற்கோ, கூட்டத்திற்கோ, அணிக்கோ தேர்ந்தெடுக்கபட்ட சிலர் முடிவெடுக்கின்றனர், அது அவர்களின் கடமை. அவர் வாழ்வில் பாவ,புண்ணியங்கள் அவர் கடமையினை பொறுத்து அமையும்.

எப்பொழுது யாரும் தலைமை ஏற்க தயாராக இல்லையோ, அப்போது தலைமை ஏற்றிடு! எப்பொழுது யாரும் முடிவெடுக்க தயாராக இல்லையோ, அப்போது முடிவெடுக்கும் உரிமையை ஏற்றிடு! இதை நம் கடமை என்ற சமயத்தில் மட்டுமே ஒதுக்கிடவேண்டும்!

# அத்தியாயம் 4 : செயலாற்றா நிலை யோகா

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், நான் இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு சூரிய கடவுளுக்கு இந்த யோகாவை கற்றுத் தந்தேன் அது பாரம்பரியத்தின் ஒரு பகுதியாக மற்றவர்களுக்கு கற்றுத் தரப்பட்டது, ஆனால் ஒரு காலத்தில் அந்த சங்கிலி உடைந்துவிட்டது. எனவே இன்று நான் மீண்டும் உனக்கு அதை கூறுகிறேன் என அர்ஜுனனிடம் கூறினார்.
அர்ஜுனன் கிருஷ்ணனிடம் கூறினான், நீங்கள் அவரை விட குறைந்த வயதுடையவராய் தெரிகிறீர்கள், எப்படி நீங்கள் சூரிய கடவுளுக்கு இதை கற்பித்திருக்க முடியும்.
கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், நீயும் பல முறை பிறந்தாய் இவ்வுலகில் மற்றும் நானும் பல முறை பிறந்தேன் இவ்வுலகில். இந்த உலகத்தில்எப்போழுதெல்லாம் நீதி குறைந்து, அதர்மம் ஓங்குகிறதோ அப்போழுதெல்லாம் நான் அவதாரமாக பிறந்து, நல்லவர்களை வாழவத்து, தீயவர்களை அழித்து இவ்வுலகில் தர்மத்தை நிலை நாட்டுகிறேன்.
"நமது வாழ்க்கை: இந்து மத புராணங்களின்படி மகாவிஷ்ணு பத்து அவதாரங்கள் எடுப்பார், அவற்றில் கிருஷ்ணாவதாரமும் ஒன்று, இன்னும் ஒரு அவதாரம் நிலுவையில் உள்ளது. இது "கல்கி" அவதாரம் இதில் கடவுள், வாள் ஏந்தி ஒரு வெள்ளை குதிரையில் வருவார் என நம்பபடுகிறது. இந்த அவதாரங்களில் சுவாரஸ்யமான பகுதி என்னவென்றால், ஒரு சில அவதாரங்கள் தவிர மற்றவற்றில் அவர் மனிதனாய் வரவில்லை. இலட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் எடுத்த முதல் சில அவதாரங்கள் மீன், பன்றி மற்றும் ஆமை ஆகிய வடிவத்தில் உள்ளது; ஏன் அவர் மனித வடிவில் இல்லை? மனித இனம் அந்த கால கட்டங்களில் இருந்ததா மற்றும் அவர்களின் பங்கு இவ்வுலகில் சிறியதாக இருந்ததா? எப்படியும் இருக்கலாம் ... நான் “ஜுராசிக் பார்க்” திரைப்படம்பார்க்கும் வரை, டைனோசர்கள் பற்றி அறியாதிருந்தேன். அவை பல ஆயிரம் ஆண்டுகள் முன்பு இவ்வுலகில் பெருமளவு இருந்தன, ஆனால் இன்று இந்த உலகத்தில் இல்லை ... உலகம் ஒரு காலத்தில் மறு சீரமைக்க / மாற்றத்திற்கு உள்ளாகிறது அர்த்தம் ... இன்று நாம் இன்று கஃல்ப் வளைகுடாவில் பெட்ரோல் கிடைப்பதை பார்கிறோம், இதன் அர்த்தம், பெட்ரோல் இருக்கும் அந்த இடத்தில் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் முன்பு தாவரங்கள் மற்றும் விலங்குகள் இருந்த செழிப்பான பகுதியாக இருந்திருக்க வேண்டும், ஆனால் இன்றோ பாலைவனம்.நாம் இன்று காணும் உலகம், எத்தனையோ மாற்றங்களுக்கு உள்ளான ஒன்று ... இதை என்னும் போது, நாம் ஓரளவு தெளிவடையலாம், ஏன் கடவுள் மனித வடிவில் வரவில்லை என்று. இது தவிர, எனக்கு தெரியாது "கல்கி"யாக கடவுள் குதிரையில் வருவாரா அல்லது அவர் பூமியில் ஒரு புதிய சூறாவளி அல்லது நிலநடுக்கம் அல்லது எரிமலை தொடராக, ஒரு புதிய வைரஸாக, பாக்டீரியாவாக, அணு குண்டாக அல்லது வேறு எதுவாகவும் "குதிரை" அல்லது "கல்கி" என்ற பெயரில்வருவாரா, யாருக்கு தெரியும். நம் கணிணி அல்லது இயந்திரம் வேலை செய்யாவிட்டால் நாம் என்ன செய்கிறோம், மீண்டும் "மறுதொடக்கம்"/"ரீஸ்டார்ட்" செய்கிறோம், இதை ஒருவேளை நாம் கடவுள் இந்த பூவுலகில் செய்த மறுதொடக்கங்களிலிருந்து தான் கற்றோமோ!
கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், எவன் ஒருவன் இந்த உண்மையை உணர்ந்து கோபம், பயம் ஆகியவற்றிலிருந்து வெளியேறி, இணைப்புகள் அற்று தன் கடமையை செய்கிறனோ அவன் என்னால் ஏற்றுக்கொள்ளபட்டு என்னுடன் ஒன்றாகின்றான். ஞானமுடையோன் இதை அறிந்து செயலாற்றுகிறான்.
"நமது வாழ்க்கை: எப்படி நமக்கு தெரியும், நாம் எந்த இணைப்பு இல்லாமல் வாழ்கிறோம் என்று? ம்ம்ம்....உங்கள் வாழ்வில் நீங்கள் மிக அதிகம் நேசிக்கும் 3விஷயங்களை (உறவு / பொருள் / அல்லது எந்த ஒன்று) நினையுங்கள்...

இப்போது உங்கள் வாழ்க்கையில் இருந்து, நாளைமுதல் அந்த மூன்றையும் நீக்கி விட்டால் ,நீங்கள் இன்னும் வாழ்க்கையில் விருப்பம் கொண்டுள்ளீரா அல்லது வாழவே விரும்புகிறீரா? .. நம்மில் பலருக்கு, அதன் பதில் "இல்லை". நீங்கள் மிகவும் விரும்பும் ஒன்றை, அதன் நன்மைக்கோ அல்லது கடவுளை உணர்ந்தோ, அதை எந்த கணமும் விட்டு விட தயாராக இருந்தால் நீங்கள் ஏற்கனவே யோகியின் நிலையில் வாழ்ந்து வருகின்றீர் என்பதாகும், இது புகழ் / ஆசை / மற்றும் சுயத்தையும் உள் அடக்கும். இவை அனைத்தையும் விட்டு உங்களால் கடமையை செய்ய இயலுமானால், நீங்கள் இந்த உலகத்தில் இங்கே அடைய எதுவும் இல்லை. இப்போது இதை எழுதுகிறேன், நான் ஒரு துறவி இல்லை. நான் எல்லாவற்றையும் விட்டு வாழமுடியுமா என் வாழ்க்கையை? எனக்கு தெரியாது... ஆனால், நான்உட்பட என்னுடன் இருக்கும் சகலமும் காலத்தால் அழிந்துபடக்கூடியது என்று புரிந்திருப்பது, என் வாழ்வில் சூழ்நிலைகளை கையாளவும், நல்ல வழியில் வாழவும் உதவும்! "

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், எவன் ஒருவன் செயலில் செயலற்ற நிலையையும், செயலற்றமையில் செயலையும் பார்க்க வல்லவனோ அவன் ஞானமடைகிறான். அவன் செயல் மற்றும் அதன் முடிவுகளில் தன்னை இணைப்பதில்லை, அந்த நிலையில் அவன் செய்யும் செயலில், எந்த பாவமும் அவனை பாதிக்காது. அவன் தனது வாழ்க்கையில் குறைந்தபட்சம் தேவைப்படும் பொருட்களோடு வாழ்கிறான்.

"நமது வாழ்க்கை: நாம் பல முறை பார்கிறோம், மக்கள் தொழில்முறை வாழ்க்கையில் தங்களின் தனிப்பட்ட பிரதிபலனை மட்டும் பிரதான இலக்காக கொண்டு ஒவ்வொரு நடவடிக்கையை தொடங்குகின்றனர், அவர்களது நிறுவனத்தை இரண்டாம் பட்சமாக்கிவிடுகின்றனர். தனிப்பட்ட வாழ்வில் அவர்களது குறிக்கோள் "இரட்டை இலக்க சதவிகிதம் சம்பளம் அதிகரிப்பு", "பணி உயர்வு" போன்றவை மட்டுமே.. அவர்கள் தம் மேலதிகாரியுடன் முதலில் கேட்பது நான் என்ன செய்தால் இந்த ஆண்டு அவற்றை அடைவேன் என்று... அவர்கள் கேட்காதது, நான் இந்த ஆண்டு என்ன கற்றறிய வேண்டும், என் திறனை எந்த வகையில் உயர்த்த முடியும் என்று நினைக்கிறீர்கள், எப்படி நான் திறம்பட என் கடமையை செய்ய அதை பயன்படுத்தமுடியும் என்று ... தற்போதைய தலைமுறை வேலை பெறுவதே அவர்களின் திறனை பொறுத்தே, ஆனால் வேலையில் சேர்ந்தவுடன் குறுகிய கால சுய இலக்குகளை பற்றி மட்டுமே கவலை கொள்கின்றனர். அவர்களின் நடவடிக்கைக்கு காரணமாக பயம் இருக்கலாம் அல்லது தெளிவற்ற சிந்தனை இருக்கலாம். தன்னை அறிந்த சுய நம்பிக்கை கொண்ட ஒருவன் முடிவை பற்றி கவலைப்படாமல், தன் செயலில் கவனம் செலுத்துகிறான் ... நீங்கள் உங்கள் மனதில் சமன்திறன் கொண்டு,திறமையான வகையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளும் போது, சம்பளம் மற்றும் பதவி உயர்வுகள் உங்கள் வழியில் தானே வரும் ... நீங்கள் கண்டுபிடித்த விலைமதிப்பற்ற மற்றும் அரிய பொருள் "நீங்கள்" தான், எனவே உங்களை நீங்கள் இழக்காதீர்கள்!

யாருக்கு அளவிற்கு அதிகமான சொத்துக்கள் அவருடைய அன்றாட வாழ்வின் தேவையை மீறி உள்ளதோ, அவர் பொருள்சார்ந்த இயல்பில் இணைக்கப்படுகிறார். பொருள்சார் விஷயங்கள் அவரை விடாது. அவருக்கு, எந்த அளவும் போதுமானதாக இருக்காது. அவரிடம் 300 கோடி டாலர்கள் இருந்தாலும் கூட, அவர் சொல்ல போகிறார் இது அவசர தேவைக்கு கூட பத்தாது என்று.ஏனென்றால் அந்த நேரத்தில் அவரது சொத்து அவரை வேலைக்காரனாக்கி (முதலீடு, கடன், அந்தஸ்து போன்ற பல இணைப்புகள் உருவாகிவிடும்) மற்றும் அவனை கோழையாக்கிவிடுகின்றன. கணிணியில் விண்டோஸ் ஆப்ரேடிங்க் சிஸ்டத்தில் நாம் எந்த மென்பொருளை உபயோகமே படுத்தாமல் வைத்துள்ளோமோ, அதை நீக்க பரிந்துரை செய்யும், ஏனென்றால் அவை இடத்தை அடைப்பதோடு அல்லாமல் செயல் திறனையும் குறைக்கும், அதே போல் வாழ்விலும் நீங்கள் பயன்படுத்தா சொத்து, உங்கள் மூளையை அடைப்பதோடு

அல்லாமல், உங்களை அடிமையாக்கி, அவற்றை காப்பதில் உங்கள் வாழ்வையை இழக்கசெய்யும், உண்மையில் அவை உங்களின் சாபம்.
கிருஷ்ணன் மேலும் அர்ஜுனனிடம் கூறினார், தியாகங்கள் மூலம் மக்கள், சர்வ வல்லமை உடைய கடவுளை அடைய முயற்சிக்கின்றனர். சிலர் பொருட்களையும், சிலர் கேட்பதையும், சிலர் உணர்வுகளையும், சிலர் சுவாசத்தையும், சிலர் ஆடம்பரத்தையும், சிலர் உணவையும் தியாகம் செய்து தங்கள் பாவங்களை அழித்து, கடவுளை அடைய முயற்சிக்கின்றனர். எல்லாவற்றிற்கும் மேலானது, உயர்கடவுளை பற்றிய அறிவும் மற்றும் இணைப்புகள் இல்லாமல் கடமையை செய்வதும், நீ ஒரு குருவிடம் இருந்து இந்த அறிவை பெறலாம். அந்த அறிவு அனைத்து விருப்பங்களையும் அழிக்க தீ போல செயல்படும். தன்னை உணர்ந்து, தன்னுள் அமைதியை அடையும் ஒரு அறிவுடையோனின் ஆன்மாவை விட, எந்த ஒரு தூய்மையாக்கும் பொருளும் இவ்வுலகில் இலலை. எவன் ஒருவன் இதை சந்தேகபடுகின்றானோ, அவனுக்கு இவ்வுலகம் மட்டும் அன்றி எவ்வுலகிலும் நிம்மதி இல்லை.
"நமது வாழ்க்கை: குரு (ஆசிரியர்) நமக்கு பல்வேறு நடைமுறைகள் மற்றும் பல்வேறு தலைப்புகளில், நமது வாழ்வை பற்றி நமக்கு அறிவாற்றலை தந்து உதவுகின்றனர். குருவின் தேவை நபருக்கு நபர் வேறுபடும். அனைவரும் மத கூட்டங்கள் அல்லது குருவின்பால் கற்று கொள்ள வேண்டும் என்பது இல்லை... இதன் தேவையை ஒரு மனிதன் சுயமாக மட்டுமே தீர்மானிக்க முடியும். இந்தியாவில், நம்மில் பலரும் ஏதாவது ஒரு குருவை பின்பற்றுகிறோம், அது நம் வாழ்வை நல்வழியில் முன்னோக்கி செல்ல உதவலாம். ஆனால் ஒன்றில் தெளிவு தேவை, அஃது உங்கள் ஆன்மாவைவிட புனிதமானது வேறேதும் இல்லை, எனவே உங்கள் ஆன்மாவின் நல்லறிவின்படி வாழ்வதே உங்கள் குறிக்கோளாக இருக்க வேண்டும். இப்போதெல்லாம், சில குருமார்கள் வணிக மக்களாக மாறிவிட்டனர்,அவர்களின் பெரும் நேரம் விளம்பரத்திற்காகவும் மற்றும் சொத்துக்கள், பிராண்ட் பெயர்கள், தொடர் மருத்துவமனைகள் / உணவகங்கள் / கல்லூரிகள், நன்கொடை உள்வரவு, நிறுவன வலிமை மற்றும் பொருட்கள் விற்பனை ஆகியவற்றை பராமரிப்பதில் செலவிடுகின்றனர். அவர்கள் தங்க நாற்காலியில் உட்கார வேண்டும், சில பாடகர் அவர்களை பற்றி பாடி மகிழ்ச்சியடைய செய்யவேண்டும், பின்பு அவர் உங்கள் மற்றும் எனது வாழ்க்கை பற்றி கேளிப்பேசி நாம் எத்தனை பெரிய முட்டாள் என புரியவைப்பார். நாம் யாரையும் வம்புக்கு இழுக்கவோ அல்லது குறை சொல்லவோ விரும்பவில்லை. மேலும் அவர்கள் எதிர்பார்பின்றி செயலில் ஈடுபடலாம், அப்படி அவர்கள் இருக்கும்போது,நாம் யார் அவர்களை பற்றி நீதி சொல்ல!
குருவானவர் நீங்கள் நடந்து செல்ல ஒரு பாதையின் வழியைகாட்டுவார், ஆனால் பாதையில் நீங்கள் தான் நடக்க வேண்டும். நீங்கள் உங்கள் வாழ்நாள் முழுவதும் ஒரு குருவை சார்ந்து இருந்தால், நீங்கள் நடக்கவே இல்லை அங்கேயே நிற்கின்றீர்கள் என்று பொருள்!

நீங்கள் யாரை நம்பும் முன்னும் நன்றாக ஆராயுங்கள், ஆனால் முடிவெடுத்தபின் உங்கள் மனதில் சந்தேகம் வர அனுமதிக்க முடியாது. ஏனென்றால் சந்தேகம் உங்களையும், சார்ந்தவர்களையும் அழித்துவிடும். "

# அத்தியாயம் 5 : உண்மையான செயலாற்றா நிலை யோகா

அர்ஜுனன், செயலாற்றாமை மற்றும் செயல் யோகா இவற்றில் எதை பின்பற்றுவது என குழப்பமடைந்தான். கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார்,செயலின் மூலம் யோகா புரிதல் , செயலாற்றாமையை விட மேன்மையானது.எவன் ஒருவன் சமன்திறன் பராமரித்து எந்த வெறுப்பு அல்லது விருப்பு மற்றும் எதிர்ப்பத ஜோடிகளின் (நன்மை, தீமை போன்ற) ஆளுமை இன்றி, செயலுடனோ அல்லது முடிவுடனோ தன்னை இணைத்துகொள்ளாமல் செயல்புரிவானோ அவன் முக்தியடைகிறான். செயலாற்றாமை என்பது கடினமான ஒன்று,துறவிகளால் மட்டுமே செய்ய கூடியது. எவன் ஒருவன், யோகா நிலை (சமன்திறன்) கொண்டுள்ளானோ, எவன் மனம் தூய்மையானதோ, எவன் தன்னையே வென்று தன் உணர்வுகளை அடக்க வல்லவனோ, அவன் செயல்களால் களங்கம் அடையமாட்டான். அவன் அறிந்துள்ளான், அவன் செய்வதேதும் இல்லையென, கண்கள் திறத்தல், கேட்டல், தொடுதல், கைகளை பிடித்தல், தூங்குதல், சாப்பிடல், முகர்தல், கேட்டல், பார்த்தல் உள்ளிட்ட அனைத்தையும் அவன் கடவுளிடத்தினில் அர்பணிக்கிறான். அவன் தாமரை இலை தண்ணீருடன் இருப்பது போல் வாழ்கிறான். உடலாலும், மனதாலும் மற்றும் உணர்வுகளாலும் யோகிகள் (சமனிலையில் வாழும் ஒருவர்) இணைப்பு இல்லாமல் செயல்படுவதோடு, மன சுய சுத்திகரிப்புடன் வாழ்கின்றனர்.
"நமது வாழ்க்கை: நம் வாழ்க்கையில், நாம் சுவாசித்து நுரையீரலை நிரப்புகிறோம், நாம் இரத்தத்தை நாளங்களில் அனுப்புகிறோம், நாம் உணவை ஜீரணிக்கிறோம், நாம் நரம்பு அமைப்புகள் வேலை செய்ய கட்டளையிடுகிறோம், நம் அனுமதி இன்றி இவற்றில் ஏதுவும் வேலை செய்யாது! .... ஓ! மன்னிக்கவும்,இவற்றில் எதுவும் நாம் செய்வதில்லை, நமது சிந்தனைக்கும் அப்பாற்பட்ட சக்தி அவற்றை கவனிக்கிறது, ஆனால் நாம் நினைக்கிறோம் நாம் சாப்பிட்டால் மட்டும் இவை அனைத்தும் தானே உடலில் நடக்குமென்று! ... உண்மையென்னவென்றால், "உடல்" எனப் பெயரிடப்பட்ட ஒரு முழுமையான சிக்கலான அமைப்பை நாம் கொண்டுள்ளோம், ஆனால் அது என்றும் நமது கட்டுப்பாட்டில் இல்லை! (நாம் பாக்டீரியாவை கண்டுபிடித்து கொல்ல வெள்ளை அணுக்களை பணிக்கிறோமா என்ன?) இருப்பினும், உடல் மிக அதிக அறிவுடன் நமக்கு தெரியாமலேயே செயல்படுகிறது! ஆனாலும் அவ்வுடல் செய்யும் வேலைகளின் முடிவை மட்டும் நமதென்று கொண்டாடுகின்றோம்!உதாரணமாக, ஒரு நாள் நாம் விழித்தெழும் போது, நம் கைகள் வேலை செய்யவில்லை; நாம் கைகளை வேலை செய் என கட்டளை இட முடியுமா? முடியாது.... எனவே நம் உடலில் நன்றாக வடிவமைக்கப்பட்ட நுண் அமைப்பு,இன்று மட்டும் அல்ல எதிர்காலத்திலும் நம்மால் அன்றி ஒரு உயர் சக்தியினால் கவனிக்கப்பட்டு, செயல்படும்போது, ஏன் அந்த உடலால் விளையும் செயலையும்,முடிவையும் மட்டும் நமதென்று கொள்கிறோம். உங்களையும் என்னையும் காக்கின்ற அவனே செயலையும் செய்கிறான், எனவே எல்லா நன்மை,தீமையையும் அவனிடம் விட்டு கடமையை செய்யவேண்டும்."
கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், ஆசை பிணைப்பிலிருந்து விடுவிக்கப்பட்டு சமனிலையில் வாழும் ஒருவன், துறவி, பறவை, நாய், நாய் தின்னும் மனிதன் போன்ற யாராகினும் அவரை ஒரே வழியில் பார்கிறான். அவன் அனைத்து சிந்தனை மற்றும் நடவடிக்கைகளை என்னிடத்தில் விட்டுவிடுகிறான். அவன் ஒவ்வொரு கணமும் அனைத்து உயிர்களுக்கும் முதல் மற்றும் முடிவு உண்டு என்பதையும், இணைப்புகள், உறவுகள் அவனுக்கு துன்பத்தை தரவல்லது என அறிந்து என்னிடம் எல்லாவற்றையும் ஒப்படைத்து வாழ்கிறான்.

"நமது வாழ்க்கை: பலமுறை நாம் கடவுளை நம்மில் இருந்து வேறுபடுத்தி, நாம் தான் எல்லா செயல்களையும் செய்வதாக நம்புகிறோம். நாம் கடவுளை வீட்டின் அல்லது அறையின் ஒரு மூலையில், ஒரு மாடத்தில் வைக்கிறோம், அதேபோல் கோவில் / தேவாலயம் / மசூதியில் கடவுளை வைத்து அவர் அங்கே மட்டும் தான் உள்ளார் என்று நம்புகிறோம். நம் கடவுளின் முன், நாம் புனிதம் இல்லாத எதையும் செய்யகூடாது என்று நம்புகிறோம். முதலில், நாம் வடிவமைப்பு மூலம்,கடவுளை நம்மிடமிருந்து பிரிக்கிறோம். இரண்டாவது, நாமே எல்லா செயல்களையும் செய்யவதாகவும் கடவுள் ஒரு விருந்தாளி என எண்ணுகிறோம்,மற்றும் கடவுள் புனிதமான செயல்களில் மட்டுமே உள்ளார், மற்ற எதிலும் இல்லை என எண்ணுகிறோம். ஆனால் கடவுளோ, நம்முடைய எல்லா செயல்களையும் அவரிடம் ஒப்படைக்கவேண்டும், அவர் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு உயிரிலும் எப்போதும் உள்ளார் என கூறுகிறார். ஆனாலும் அவரின் பேச்சை நாம் கேட்பதில்லை. சில நேரங்களில் ஏதோ கடவுள் கால் சென்டர்/தொலைபேசி சேவை நடத்துவது போல, எப்போதெல்லாம் அவரின் தேவை உண்டோ அப்போதெல்லாம் ஒரு விண்ணப்பத்தை செய்து, அவர் சேவையை பூர்த்தி செய்ய காத்திருக்கவேண்டியது. அது நடக்காவிடில் அவரிடம் சென்று ஒரு புகார் மனுவை தர வேண்டியது. கவலைப்படாதீர்கள், நம்மில் பலர் வாரந்திர,மாதந்திர அல்லது வருடாந்திர சந்தா செலுத்துவதாகவும் நம்புகின்றனர்!

# அத்தியாயம் 6 : சுய கட்டுப்பாடு யோகா

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், செயலின் மீதோ, முடிவின் மீதோ பற்று இல்லாமல் தன் கடமையை செய்யும் ஒரு யோகி, செயலாற்ற இருப்பவனை விட மேலானவன். தன் எண்ணங்களை வென்ற ஒருவனே உயர் நிலைக்கு செல்கிறான். மனிதர்கள், தங்களை தாங்களே தாழ்த்திகொள்ளகூடாது,தன்னை வென்ற ஒருவன் தன் சுயத்திற்கு நண்பனாகிறான், அது இயலாதவனோ தனக்கு தானே எதிரி ஆகிறான். தன்னை வென்ற ஒருவனுக்கு மண்ணோ,நிலமோ,தங்கமோ அல்லது வேறு ஏதாகினும் எல்லாம் ஒன்று தான். அவன் தன்னை விட உயர்ந்ததும் இல்லை, தாழ்ந்ததும் இல்லை என உணர்ந்து,உயர்கடவுளின் மீது தன் எண்ணத்தை செலுத்துகிறான்.

""நமது வாழ்க்கை: நம் சொந்த வாழ்விலும், தொழில் வாழ்விலும் பார்கிறோம், ஒருவர் மற்றவரிடம் பழகுவது அவர்களின் பதவி / சாதனை /அந்தஸ்து போன்றவற்றை அடிப்படையாக கொண்டு அமைந்துவிடுகிறது. நாம் ஒரு நிறுவனத்தின் தலைமை நிர்வாக அதிகாரியிடம் பேசும் போது, நாம் மிக பெரிய சாதனை செய்ததாகவும், அதே அலுவலக உதவியாளரிடம் பேசும்போது,அவருக்கு அறிவுரை செய்வதும் அவரை ஒரு முட்டாளை போல நடத்துவதும் வழக்கமாகிறது. அவர்கள் இருவருமே இந்த உலகத்தில் கொடுக்கப்பட்ட தங்கள் கடமையை மட்டுமே செய்கினறனர். 1000 பேருக்கு வேலை தருகிற ஒரு தொழிலதிபராயினும் அல்லது அவரது அலுவலக இடத்தை சுத்தம் செய்யும் தொழிலாளி ஆயினும், இருவருமே சமமானவர்கள் தான்! இந்த உலகத்தில் எந்த உயிரினமும் உயர்ந்ததோ, தாழ்ந்ததோ அல்ல, அனைவரும் சமமானவர்களே! பதவி அதிகாரம் என்பது அந்த பதவியின் செயல் வெற்றிக்கு வழங்கப்பட்ட ஒரு உபகரணம் மட்டுமே! தனது முயற்சிகளில் தொடர்ச்சியாக தோல்வியை சந்திக்கும் ஒரு மனிதன், வாழ்க்கையில் தோல்வியாளனாயிருக்க வேண்டிய அவசியமில்லை, ஒருவேளை அவன் இணைப்புகள் இல்லாத வாழ்வும் எப்படி தோல்வியை கையாள்வது என அறிந்தும் இருக்கலாம். பெரும்பாலான வெற்றியாளர்கள், தோல்விகளை சந்தித்து அதிலிருந்து வெற்றி இலக்கை அடைந்தவர்களே, எனவே தான் அவர்களை நாம் பெரும் மனிதர்கள் என்கிறோம்.நீங்கள் வேலை செய்யும் இடத்தில் ஒரு உயர் அதிகாரி முன்னால் உட்கார்ந்து பேசும் போது, நீங்கள் பயத்துடன் அல்லது பதட்டத்துடன் இருக்க வேண்டுமா?இல்லை... நீங்கள் என்ன வேலை செய்கிறீர்களோ, என்ன அறிந்துள்ளீர்களோ அது அந்த அமைப்பு / தொழிலகம் / சமுதாயத்தில் தேவைப்படுவதன் காரணமாகவே,நீங்கள் அங்கே வேலைக்கு அமர்த்தபட்டிருக்கிறீர்கள், அதனால் உங்கள் பங்கை நீங்கள் முதலில் ஒப்பு கொள்ள வேண்டும். ஒரு தனிநபராக, நீங்கள் உயர் கடவுளின் வழிமுறைகளுக்கு நெருக்கமாகவும், வாழ்க்கை மற்றும் வேலையை நன்றாக புரிந்தும் இருக்கலாம். அதனால் நாம் யாரிடமும் தாழ்ந்தோ அல்லது உயர்த்தியோ நம்மை பிரதிபலிக்கதேவையில்லை."

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் , எவ்வாறு உடல் மூலம் யோகா செய்து மனதை கட்டுபடுத்தி, கவனத்தை நிலை நிறுத்துவதெனவும், யார் ஒருவன் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ உண்கிறானோ அல்லது உறங்குகிறானோ அவனால் அதை பயிற்சி செய்ய இயலாது என்றும் கூறினார்.எவன் ஒருவன் தன் சுயத்தை, சுய மனம் கொண்டு பார்த்து, அதனில் திருப்தியடைகிறானோ, அவனை பெரும் துன்பங்கள் சேர்வதில்லை. யோகா பயிற்சி செய்யும் ஒருவன் தன் சுயத்தில் கவனத்தை செலுத்தி சிறிது சிறிதாக உணர்வுகளையும், இணைப்புகளையும் விட்டு, தனக்கு நிலையற்றதன்மை தருபவற்றை நீக்க ஆரம்பிக்கிறான். அவன் என்னை எல்லா இடங்களிலும், எல்லா பொருட்களிலும் பார்க்கிறான். அவனுக்கு நான்

என்றும் மறைவதில்லை. எவன் ஒருவன் ஒப்பீடு தன்னுடன் மட்டும் உள்ளதோ, அவன் என்னை எங்கும் பார்கிறானோ அவன் உயர்ந்த யோகி ஆகிறான். எல்லா யோகிகளிலும் தன் மனதினுள்ளே என்னை யார் பார்கின்றானோ, என்னோடு இணைகின்றானோ அவனே உயர்ந்த யோகி.
"நமது வாழ்க்கை: மூன்று வகையான மக்கள் நம்மிடையே உள்ளனர், முதலாவது, எப்போதும் உயிர்வாழ போராடும் மனிதர்கள், அவர்கள் வாழ்வில் அனைத்துமே குறுகிய காலத்தில் வாழ்வதற்காக அல்லது இன்பத்திற்காக மட்டும் அமைகிறது. இரண்டாவது, ஒப்பீட்டு மனிதர்கள், தனது வாழ்க்கையில் எப்போதும் இவர்கள் இயக்கப்படுவது சூழல், சமூகத்தால் மட்டுமே, அவர்கள் மற்றவர்களின் வாழ்வுடன் தங்களை ஒப்பிட்டு பார்த்து குறிக்கோள்களை நிர்ணயிக்கின்றனர்,அதை அடைய முயற்சிக்கின்றனர், மீண்டும் அவர்கள் ஒப்பிட தொடங்கி வாழ்கின்றனர். மூன்றாவது, முன் நிற்கும் மனிதர்கள், அவர்கள் வாழ்வில் எதையும் ஒப்பிடுவதில்லை, அவர்கள் தங்கள் உந்து சக்தியுடன் புதியவற்றை தொடங்குகின்றனர்.

நம்மில் பலர் இங்கே ஒரு ஒப்பீட்டு வாழ்க்கையை வாழ்கிறோம், நாம் நமது வாழ்க்கையை திரும்பி பார்க்க விரும்புவதில்லை. பயம் ... ஆம் நாம் பயப்படுகிறோம்! உண்மையில் நாம் ஒரு நல்ல வாழ்க்கை வாழ்கிறோமா, நாம் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறோம், மற்றும் பலவற்றை சிந்திக்கவும் அஞ்சுகிறோம்... ஏனென்றால் நாம் இவற்றை சிந்திக்கும் நேரத்தில், நம்மைமற்றவர்கள் கடந்து போய்விடுவார்கள் என கவலைகொள்கிறோம்... எனவே நம்மை நாமே உந்தி தள்ளி, போட்டியிட்டுகொண்டிருக்கிறோம் ... நாம் முன் நிற்கும் மனிதர்கள் என்று கூறியவர்கள் தொழிலதிபர்களோ அல்லது உயரதிகாரிகளோ அல்ல, அவர்கள் தங்கள் மனதிலோ, மூளையிலோ தங்களை மற்றவருடன் ஒப்பிடாமல், எந்த மாற்றத்திற்கும் தயாராக தன் சுயத்தின் மீதோ அல்லது கடவுளின் மீதோ முழு நம்பிக்கை கொண்டு, வாழ்வில் முன் நோக்கி செல்கின்றனர். சுய நம்மிக்கை அல்லது கடவுள் நம்பிக்கை இவை இரண்டில்,ஏதாவது ஒன்று அவசியம் அந்த உயர் கடவுளை அடைவதற்கு."

# அத்தியாயம் 7: ஞானத்தோடு புரிந்துணர்வு யோகா

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் கூறினார், பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம்,அறிவு மற்றும் அகம்பாவத்தை நான் உருவாக்கினேன் மற்றும் எல்லாவற்றிற்கும் மேலாக, இங்குள்ள உயிர்களை உருவாக்கினேன். இவை அனைத்தும் மணிகள் நூலின் மீது சரமாக தொகுக்கப்பட்டது போல என் மீது அமைந்துள்ளது. மேலும் அவர் கூறினார், நீரின் சுவையும், நிலவின் வெளிச்சமும், வேதங்களில் உள்ள "ஓம்" என்ற ஓசையும், மண்ணின் வாசமும், ஒளிக்கதிர்களின் ஒளியும்,அறிவாளிகளின் அறிவும் மற்றும் அனைத்து வாழ்வும் என்னுள் அமைந்ததுவே.தூய்மை, செயல் புரிதல் மற்றும் செயலாற்றமை போன்ற பல பண்புகளும் உயர்கடவுளான என்னிடம் இருந்து வருகிறது, ஆனால் நான் அவற்றினுள் இல்லை, இவை அனைத்தும் தெய்வீக மாயைகள், இவற்றை கடப்பது மிகவும் கடினம். துயரத்தில் இருப்பவன், அறிவை தேடுபவன், செல்வத்தை தேடுபவன் மற்றும் ஞானிகள் இவர்கள் அனைவருமே என்னை வழிபடுகின்றனர்,இவர்களில் என்னை மட்டும் குறிக்கோளாக வாழும் ஞானியே எனக்கு விருப்பமானவன். நான் வடிவம் இல்லாமலும் மற்றும் பல்வேறு வடிவங்களிலும் இருக்கிறேன், மனிதர்கள எந்த வடிவத்தை பின்பற்றி என்ன வேண்டுகின்றனரோ அதை அவர்கள் அடைகின்றனர், இதில் எவன் ஒருவன் என்னுடைய உயர் வடிவத்தினை வழிபடுகின்றானோ அவன் என்னை அடைகின்றான், அவன் அழிவற்ற நிலைக்கு செல்கிறான். நான் கடந்த காலம்,நிகழ் காலம் மற்றும் எதிர் காலத்தினை அறிந்தவனாயிருக்கிறேன், ஆனால் என்னை அறிந்தவர் எவருமில்லை. ஞானமுற்றோன் இறக்கும் தருவாயில் கூட என்னை வணங்கி என்னிடம் வருகின்றான், அவர்கள் மட்டும் அன்றி பாவம் செய்தவர்கள் கூட இறக்கும் போது என்னிடத்தில் சரணடைவார்கள் என்றால் என்னிடம் வந்தடைகின்றனர்.

"நமது வாழ்க்கை: இந்த பிரபஞ்சம் ஒரு அற்புதமான இடம், இதில் பல அற்புதமான படைப்புகள் உள்ளன! ஆனாலும் நாம் சற்று அருகே சென்று பார்த்தால், இவை அனைத்திலும் சில பொது அமைப்புகளை காணலாம். ஒரு உலோகத்தின் அணு,ஒரு உடலின் ஒரு செல் போன்ற மிகச்சிறிய வடிவமாயினும், மற்றும் மிகப்பெரிய இந்த பிரபஞ்சமே ஆயினும், இவை அனைத்தும் தன் மையத்தில் ஒரு கருவையும்,அவற்றை சுற்றி சுதந்திரமாக சுற்றி திரியும் துகள்களும், மற்றும்சுற்றுவழிப்பாதையில் சுற்றி திரியும் துகள்களும் (எலக்ட்ரான்,கிரகங்கள்,போன்றவை) கொண்டு அமைந்துள்ளது, இங்கு அனைத்து பொருள் கூறுகள் மற்றும் உயிரினங்களின் அடிப்படையும் பொதுவான வடிவத்திலேயே உள்ளது. எனவே, நாம் பகவத் கீதையில் கடவுள் எல்லாவற்றிலும் உள்ளார் என படிக்கும் போது, ஆச்சரியம் ஒன்றும் இல்லை. மேலும் நியூட்டன் விதிகளின் படி (ஆம். .. பள்ளியில் நமக்கு மதிபெண்கள் பெற்று தந்த அறிவியல் பாடம்!) இந்த பிரபஞ்சத்தில் ஆற்றலை உருவாக்கவோ முடியாது மற்றும் அழிக்கவோ முடியாது, ஆனால் அது ஒரு வடிவத்தில் இருந்து மற்றொரு வடிவிற்கு மாற்ற முடியும். இது ஒரு அறிவியல் கோட்பாடு எனும் போது, நாம் கேள்வி கேட்பதில்லை, அதே ஒரு புனித புத்தகத்தில் வரும் போது நாம் அவற்றை நம்புவதில்லை ... கடவுள் பிறப்பு மற்றும் அழிவற்றவர் மற்றும் அதே போல் ஆன்மா பிறப்பதுமில்லை மற்றும் இறப்பதுமில்லை, ஆனால் அவை வெவ்வேறு உடல்களின் வடிவங்களை அடையமுடியும்... அறிவியல் என்பது அவரது படைப்புகளை படிக்க பயன்படுத்தப்படும் ஒரு மொழி, ஆனால் அது கடவுளோ அல்லது அவரை அடையும் பாதையோ ஆகாது, அவரை அடையும் ஒரே வழி"நம்பிக்கை", அது மட்டுமே நம்மை உயர் கடவுளிடத்தில் இட்டு செல்லும்.

# அத்தியாயம் 8: அழியாத பிரம்மாவின் யோகா

கிருஷ்ணன் அர்ஜுனனிடம் விளக்கினார், மரணத்தின் போது / உடலை உயிர் விட்டுபிரியும் தருவாயில், ஒரு நபர் தன் இலக்கு உயர் கடவுள் மட்டுமே என வழிபடுகின்றானோ அவனும்,எவன் ஒருவன் தியானத்தில் தன்னை ஈடுபடுத்தி தொடர்ந்து உயர் கடவுளை வழிபடுகின்றானோ அவனும், வேதங்களை படித்து அவற்றில் உள்ள விதிகள் மற்றும் வழிகாட்டுதலின் படி வாழும் ஒருவனும்,ஆன்மீக சேவையில் தனது வாழ்க்கையை அர்ப்பணித்து, முழுமையாக தொடர்ந்து செய்யும் ஒருவனும், மற்றும் எவன் ஒருவன் சூரியன், சந்திரன் மற்றும் எல்லா கடவுள்களாக, என்னை எண்ணத்திற்கு அப்பாற்பட்டவனாவாக,பொருள்களுக்கு அப்பாற்பட்டவனாவாக, பெரியவனாய், சிறியவனாய்,எல்லாவற்றின் கட்டுப்படுத்தி யாக, மிக பழமையான மற்றும் உச்ச ஆளுமைடயை கடவுளாக புரிந்து வாழும் யோகியும், உட்பட அனைவரும் என்னையே அடைகின்றனர்.
கிருஷ்ணன் கண்களை மூடி, மைய புள்ளியை தன் கண்களின் இடையே நிறுத்தி,"ஓம்" என்ற மந்திர உச்சரிப்புடன், கடவுளை பற்றிய சிந்தனையில் மனதை கட்டுபடுத்தி எப்படி தியான யோகா பயிற்சியில் ஈடுபடுவதென விளக்கினார். இதேபோல் அவர், பிரம்மா மற்றும் மனிதன் நாட்கணக்கில் உள்ள வித்தியாசம்,மற்றும் காலம் மற்றும் நாள் / இரவு, ஆகியவற்றின் அடிப்படையில் எப்போது ஒருவன் பிறப்பற்ற நிலையை அடைய முடியும் என்றும் விளக்கினார். இவற்றிற்கு அப்பாற்பட்டு எவன் ஒருவன் உறுதியாக உயர் கடவுளை மட்டும் மரணத்தின் தருவாயில் வழிபடுகிறானோ அவன் நிச்சயம் என்னை அடைகிறான் என கிருஷ்ணன் விளக்கினார்.
"நமது வாழ்க்கை: நாம் ஒரு மிகவும் பிரபலமான கேள்வியை இன்று நம் முன் எழுப்புவோம், உலகம் ஒரு விண்மீனால் இன்று அழிக்கப்பட போகிறது, அதை நடு வானில் தடுத்தி நிறுத்தி அழிக்க அமெரிக்கா, ரஷ்யா அல்லது சீனாவிற்கு வாய்ப்பு இல்லை எனவே அதிகாரபூர்வமாக இவ்வுலகம் இன்னும் 2 மணி நேரம் மட்டுமே இருக்கும் என்றால், நீங்கள் இப்போது என்ன செய்ய போகிறீர்கள் ...?நம்மில் பலர் நம் இறுதி ஆசையை பூர்த்தி செய்ய விரும்புவார்கள். சிலர் மதுபானகடையில், சிலர் குடும்பத்துடனும், சாலையில் கூவிதிரிவோர் சிலர்,மூலையில் அழுபவர் சிலர், தொலைபேசியில் சிலர், காதலில் சிலர், சிலர் புனித புத்தகம் படித்தோ மற்றும் தேவாலயத்தில் / கோவிலில் / மசூதியில் வழிபட்டோ (அடிப்படையில், உலகம் இன்று முடிவுக்கு வர கூடாது என்று பிரார்த்தனை செய்து,கடவுள் ஏதாவது மாயை செய்து அவர்களை காப்பாற்றி இன்னும் சில ஆண்டுகள் வாழ செய்ய) இருக்கலாம். பெரும்பாலானோர் இறுதி நேரத்திலும் தங்களின் உணர்ச்சியின் தேவையை பூர்த்தி செய்வதிலும், எந்த ஒரு செயல் தன்னை மறக்க செய்து இன்பத்தை தருகிறதோ அல்லது பயத்தை நீக்குகிறதோ அதிலும்,தன் நிறைவேறா ஆசைகளை பூர்த்தி செய்வதிலும் ஈடுபடக்கூடும், இதில் கடவுளை மட்டும் குறிக்கோளாக வேறு எதையும் மனதில் நினைக்காமல் தன் கடைசி கணங்களை கழிப்பவர் மிகவும் குறைவாகவே இருப்பர்!

யார் ஒருவர், புனித நூல்களை படித்தோ அல்லது புனித இடத்தில் வேண்டிக்கொண்டு கடவுளை தேடுகின்றனரோ, அவர்கள் இன்னமும் வெளியே காகிதத்தில் (சொற்களில்) அல்லது ஒரு இடத்தில் கடவுளை தேடி வருகின்றனர். அதில் தவறு ஒன்றும் இல்லை. எனினும், நீங்கள் கடவுளை வெளியே தேட ஆரம்பித்தால், உங்கள் பாதை மிக பெரியது மற்றும் அதற்கு இறுதி என்பது கிடையாது. நம்மில் பலர் கடவுளை ஒரு வடிவத்தில் அல்லது ஒரு செயலில் அல்லது இயற்கையில், அல்லது ஒரு இடத்தில் பார்க்க வேண்டும் என நினைக்கிறோம் ... கடவுள் நமக்கு நம் கண் முன்னே வர

வேண்டும் ... அவர் ஏன் வரவேண்டும் உங்கள் முன்னே? .... கடவுள் உங்களின் உள்ளே உள்ளார், அவரே ஆன்மாக்களின் அடிப்படை ஆன்மா மற்றும் இங்குள்ள அனைத்து ஆன்மாக்களும் அவரின் ஒரு பகுதி என்றால், உங்கள் ஆன்மாவில் தான் கடவுள் வாழ்கிறார் ... வெளியே அவரை தேட வேண்டாம் ... நீங்கள் எப்போதும் அவரை கண்டுபிடிக்க முடியாது! உங்கள் வாழ்வின் எந்த ஒரு கணமாகவும் இருக்கலாம் அவர் உங்களை விட்டு பிரிவதில்லை! நீங்கள் யாருக்காவது உதவலாம், இறைச்சி உண்ணாலாம், தேநீர் அருந்தலாம், காயமடைந்திருக்கலாம், அல்லது வேலை செய்யலாம், மற்றும் எதை வேண்டுமானாலும் செய்யுங்கள் எந்த ஒரு கணத்திலும், எல்லா இடங்களிலும் அவர் உங்களுடனே இருக்கிறார்! நாம் அவர் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டுமே வாழ்கிறார் என்று நினைக்கிறோம், இது அறியாமை தவிர வேறு எதுவும் இல்லை.அவர் உங்களை தனியாகவிடுவதில்லை, அது வெற்றியாகட்டும், தோல்வியாகட்டும், இழப்பாகட்டும் அல்லது வேறு ஏதுமாகட்டும், அவர் உங்களுடன் இருந்து உங்கள் வலியிலும் மற்றும் மகிழ்ச்சியிலும் இருக்கிறார். நீங்கள் உறுதியுடன் இருக்கலாம், நீங்கள் அவரின் ஒரு பகுதியென, நீங்கள் கவலைப்பட ஒன்றும் இல்லையென, ஆனால் நீங்கள் கடவுள் இல்லை! எப்படியாயினும் இதை எல்லோரும் ஒரே அளவில் புரிந்து கொள்ள முடியாது என்பதால் தான், பல மதங்கள் மற்றும் வழிமுறைகளை(பிரார்த்தனை, தியானம், ஆன்மிக சேவை போன்றவற்றை) அவர் படைத்துள்ளார்.

# அத்தியாயம் 9: காலம் ஆளும் யோகாவின் ரகசியம்

அவன் உயர் கடவுளின் அன்பு பெற்ற மற்றும் உண்மையான சீடர் என்பதால், கிருஷ்ணன் அவனுக்கு மிகப் பெரிய இரகசியம் சொல்கிறேன் என்றார். அவர், அனைத்து உயிரினங்களிலும் அவர் ஒரு பகுதியாக இருக்கிறார், ஆனால் எந்த ஒரு பகுதியிலும் அவர் முழுமையாக இல்லை. இங்கு அனைத்து உயிர்களும் வாழ்நாள் காலத்தில் உயிர்வாழ வேண்டும் பின் இறுதியில் அவை வெளியேற அதன்பின் மீண்டும் இந்த உலகை அடைகின்றன. நானோ மீண்டும் மீண்டும் அவற்றை அனுப்ப, அதை இயற்கை என அழைக்கிறீர். நான் எச்செயலுக்கும் கட்டுபட்டவன் அல்ல , இருப்பினும் என் செயல்களை தொடர்ந்து செய்கிறேன். என் மேற்பார்வையில் இயற்கை நகரும் மற்றும் நிலைத்திருக்கிறுக்கிறவற்றை தயாரிக்கிறது அதனால் உலகம் உய்கிறது. நானே உணவு, மருந்து, மந்திரம், வெண்ணெய், தீ, உலகின் தந்தை, தாயார், ஆதரவாளரும், தாத்தா, நான் அறிந்து கொள்ள கூடிய ஞானம், தூய்மையாக்கி, "ஓம்" எனும் ஓசை மற்றும் அனைத்து வேதங்களாக இருக்கிறேன். நானே இலக்கு, பாதுகாப்பாளன், இறைவன், சாட்சி, உறைவிடம், தங்குமிடம், நண்பர், பிறப்பிடம், கலைப்பு, அடித்தளம், புதையல் மற்றும் பல வடிவங்களில் நான் அழியாதவனாய் இருக்கிறேன். நானே எங்கும் நிலைத்து வெப்பம், குளிர், மழை ஆகியவற்றை தருகிறேன். நான் அழியாதவனாய், மரணமாய் மற்றும் பிறப்பாய், இருப்பவனாய் மற்றும் இல்லாதவானாய் உள்ளேன்.

"நமது வாழ்க்கை: நம் வாழ்வில் நடப்பவை அனைத்தையும் கடவுளின் அங்கமாக அறிவதற்கு கடினப்படுகிறோம் (கடவுளின் செயல் என எண்ணாமல், அதை கடவுளின் ஒரு பகுதியாக). ஏனென்றால் தான் என்பது சுய செயல்கள், ஆசைகள் மற்றும் கர்வத்தால் ஆனது. ஒரு மனிதன் மிகவும் பலவீனமடைவது தான் நேசித்தவரை இழக்கும் போது அல்லது அன்பை இழக்கும் போது. நாம் ஏன் உண்மையில் அந்த நேரத்தில் பலவீனமடைகிறோம் என்றால் அந்த அன்பு மீண்டும் அடைய இயலாது என்பதால். ஆனால் ஏன் நாம் அதை அடைய வேண்டும்? ஏனெனில், நாம் சிந்தனையை விட தயாராக இல்லை, வேறு என்ன செய்ய என புரிவதில்லை. நம் கர்வம் நம்மை பயனற்றவராய் வகைப்படுத்துகிறது – மேலும் ஒருவரை மறப்பது தவறு என எண்ணுவதால் நினைவலைகளில் சிக்குகிறோம்.

பல மக்கள் தங்கள் வாழ்க்கையை இழக்க, தற்கொலை செய்ய, கொலைகள் செய்ய, தம்மை சேர்ந்தவறை துன்புறுத்தவும் செய்கின்றனர். ஆனால் ஏன்? கடவுள் அனைத்துமாகவும் மற்றும் நீங்கள் நேசித்தவறாகவும் வாழ்ந்த போது/ வாழும் போது, அவரே மறைந்தார் அல்லது மறக்க சொன்னார். உண்மை இதுவென்றால் யாருக்காக காத்திருக்க வேண்டும், எதற்காக அழவேண்டும். அவர் ஒரு வடிவில் மறைந்தால் இன்னொரு வடிவில் வருவார். மறவாதீர், நீங்களும் ஒரு நாள் விட்டு செல்வீர்கள் க்வரை. ஆனாலும் அவர்களுடனும் கடவுள் இருப்பார். எனவே மாற்றத்தை ஏற்றுக்கொள்ளுங்கள், அதுவும் அவரே!

அவர் உங்களுடனும், உங்களை சேர்ந்தவருடனும் என்றும் உள்ளார். நீங்கள் பிரார்திக்க வேண்டியது அவர்களும் உயர் கடவுளை அடைய வேண்டும், மீண்டும் பிறக்ககூடாது. எனவே எழுந்து நடங்கள், புகை உங்களை சூழ விடாதீர்.

கிருஷ்ணன் சொர்க்கத்தையும் மற்றும் பிறப்பு பற்றி அர்ஜுனனிடம் கூறினார். வேதங்கள், புனித சோமா பானம் குடிப்பவர் , தூயவர், அர்ப்பணிப்பவர் மற்றும் வழிபடுபவர் என அவர்கள் அனைவரும் சொர்க்கம் சென்று கடவுளர்கள் மற்றும் தேவர்களுக்கான ம தெய்வீக இன்பங்களை அனுபவிக்கின்றனர். அவர்களுடைய பலன் தீர்ந்தவுடன் மீண்டும் இவ்உலகத்தில் பிறக்கின்றனர். அவர்கள் அனைத்து வேதங்களை பின்பற்றினாலும், இச்சுழற்சியில் சுழல்கின்றனர். என்னை முழுமையாக யார் வழிபாடு செய்கின்றனரோ , அவர்களுக்கு நான் என்னித்தில் இடத்தை தருகின்றனர். மேலும் வேறு தேவர்களை வணங்குகிறார் அல்லது வேறு எந்த வடிவங்களில், அவர்கள் வணங்கினாலும் அவர்கள் என்னையே வணங்குகிறனர். நானே எல்லாமும் மற்றும் உயர் கடவுளாய் இருக்கிறேன், அறியாமை இதை மறக்கின்றனர். நானே அனைத்தையும் அனுபவிப்பவன் , நானே அனைத்தையும் இழப்பவன், ஆனால் அதை அறியாதவன் தோல்வியடைகிறான். தேவர்களை வணங்குபவர், அவரை சென்றடைகின்றனர்; மூதாதையர் வழிபாடு செய்பவர்கள், அவரை சென்றடைகின்றனர்; பொருட்களை வணங்குபவர், அவற்றை அடைகின்றனர்; என்னை வணங்குபவன் என்னிடம் வந்தடைகிறான். பக்தியோடு ஒருவர் என்னிடம் ஒரு இலையை, ஒரு பூவை, சிறிது நீரை தந்தாலும் அதை அன்போடு ஏற்கிறேன். எனவே எதை நீ செய்தாலும் அதை எனக்கே அர்ப்பணி. அதனால் செயற்வினையிலிருந்தும், நன்மை, தீமையிலிருந்தும் விடுபெறுவாய் மற்றும் என்னை வந்தடைவாய். எனக்கு விருப்பமானவர் அல்லது விருப்பமற்றவர் என ஒருவரும் இல்லை, ஆனால் என்னை முழுமனதுடன் வழிபடுவரின் உள்ளே நான் இருக்கிறேன், அவர்கள் என்னுள் இருக்கின்றனர். பாதகனும் என்னை அடையலாம், முழுமையாக தன்னை அர்ப்பணிப்பதன் மூலம். எனவே உன் மனதை என்னில் நிறுத்து, பக்தி செலுத்து, உன்னை அர்ப்பணி இதன் மூலம் என்னை வந்தடையலாம்.

"நமது வாழ்க்கை: நாம் பல வடிவங்களில் தெய்வங்களை வணங்கலாம், ஆனால் அவை இறுதியில் ஒரே உயர் சக்தியை அடைகிறதென கடவுள் கூறியுள்ளார். அப்படியானால் இங்கு மதங்களின் பெயரால் எதற்கு பிரச்சினைகள்? என்ன சாதிக்க விரும்புகிறோம்? கடவுள் நம்மை தன் நிலத்திற்கும், விதிகளுக்கும், கோட்பாடுகளுக்கும் நீதி வாங்கி தர வேண்டுகிறாரா? அறியாமை, பயம், அரசியல், தன் இன அடையாளம், கர்வம் இவை அனைத்தும் அறிவை மறைத்து, தன் கடவுளை காக்க போரிட செய்கிறது. தானே தன் கடவுளை காப்பதாய் இருமாப்பு கொள்ளவைக்கிறது (கிருஷ்ணனின் மற்ற அனைத்து வடிவங்களும் அவரது எதிரி என நாம் அவருக்கே சொல்கிறோம்). இப்படி ஒரு எண்ணம் இருந்தால் கீதையை

மீண்டும் ஒருமுறை, அல்ல, பலமுறை படியுங்கள். அவனே உயர் கடவுள் அனைத்தையும் பாதுகாக்கிறான். ஒருவன் தன் உண்மையில் வழிபடவிரும்பினால் அவன் சொற்களை பின்பற்றவேண்டும். ஆனால் அதை விட்டு, புனித நூலை ஓரிடத்தில் மறந்துவிட்டு அவனிடமே சண்டைசெய்ய கூடாது. உங்களின் வெறுப்பு மற்றும் பழிவாங்கள் நடவடிக்கைகள் உண்மையில் வேறு மதத்தின், இனத்தின் மீதோ நடக்கவில்லை, ஆனால் உயர் கடவுளின் மீது நடக்கிறது. (உண்மை இங்கு ஒரே கடவுள், சிலர் அதை அல்லா, இயேசு, புத்தன் மற்றும் கிருஷ்ணன் எங்கின்றனர்)

இங்கு யாரவது நான் பகவத் கீதையை காக்கின்றேன் என கூற முடியுமா? யாராலும் முடியாது. அதன் வாழுதல் கடவுளால் நடத்தப்படுகிறது. ஆராய்ந்து பாருங்கள், இங்கு கரநாடக / இந்துஸ்தானி இசையோ, பரத நாட்டியமோ, சில மொழிகளோ சரியான பதிவேடுகள் இல்லாமல் காலம் கடந்து வாழ்கின்றன. ஏனென்றால் மக்கள் அதனை பின்பற்றினார்கள், அது அவர் வாழ்வின் பாகமாகிவிட்டது. ஆனால் பகவத் கீதையை நாம் பின்பற்றவில்லை அதனால் தேவையற்ற சண்டைகளிலும், கொடுமைகளிலும் மகத்தின் பெயரால் ஈடுபடுகிறோம். யாருக்கு தெரியும் ஒருவேளை கடவுள் இவ்வுலகில் முட்டாள்களும், அறிவாளிகளும் சமமாக இருக்க நினைக்கிறாரோ!

ஒரு இரகசியமாய் கடவுள்  நமக்கு சொன்னதெல்லாம் , நம் செயல்களையும் அதன் முடிவுகளையும் அவருக்கே அர்ப்பணிப்பதன் மூலம் அவரை அடையலாம் என.  இது தோல்வியின் போது சுலபமானது ஆனால் வெற்றியடையும் போது கடவுளிடத்தில் தருவது நமக்கு கடினமாகிவிடுகிறது. வெற்றி மற்றும் புகழ், நீங்கள் அவருக்கு அர்ப்பணிக்காவிட்டால் உங்களை அடிமையாக்கிவிடும். நம் வாழ்வில் பார்கிறோம் பலரை, ஏதோ ஒரு துறையில் சாதித்தற்காக (ஒரு எழுத்தாளனோ, ஒரு நடிகரோ, ஒரு பத்திரிக்கையாளரோ) மாயையின் வசப்பட்டு எல்லாவற்றிலும் பங்கெடுத்து, தான் அறியாதையையும் பேசி சிக்கல்குள்ளாகுகின்றனர்.  ஆனால் சிலர் மட்டும் தன் நிலை பேணுகின்றனர். இரவு விருந்துகள், ஆடை அலங்காரங்கள் என அடுத்தவர் விருப்பத்திற்கும், புகழ்ச்சிக்குமாய் வாழ்வது மாயையல்லவா. இதிலிருந்து வெளியே வர உண்மையை அறிந்து உயர் கடவுளுக்கு அனைத்தையும் ஒப்படைக்க வேண்டும்.

"

# அத்தியாயம் 10: ஆண்டவனின் புனித லீலைகளைப் பற்றிய யோகம்

மேலும் பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு சொன்னவை: எந்த ஒரு ரிஷிக்கும் அல்லது எந்த கடவுளின் உருவத்திற்கும் தன்னைப் பற்றித் தெரியாது என்றார். தன் மூல அவதாரங்கள் அவர்களுக்குத் தெரியாது. அவரே வேதங்களுக்கு எல்லாம் மூலமானவர். எல்லா கடவுள்களுக்கும் ரிஷிகளுக்கும் மூலமானவர் அவரே. யாருக்கு பகவான் கிருஷ்ணர் பிறப்பே இல்லாதவர் என்று தெரியுமோ அல்லது அவரே இந்த மூவுலகங்களுக்கும் ஆண்டவர் என்றும் கடவுள்களுக்கு எல்லாம் மேலானவர் என்று தெரியுமோ, அந்த கொள்கையைப் பின்பற்றி வாழ ஆரம்பிக்கிறாரோ அவர் எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலை பெற்றவராவார். ஒரு பிறப்பற்ற நிலையை அடைந்து விடுகிறார். உலகில் நடக்கும் எல்லாவிதமான சம்பவங்களும் சரி, அல்லது அறிவு, புத்திசாலித்தனம், ஞானம், சத்தியம், பொய், வலி, பயம், இறப்பு பிறப்பு, வன்முறை, அஹிம்சை, சமத்துவம், சமாதானம், புகழ், வெட்கம் எல்லாமே என்னிடமிருந்துதான் வருகின்றன. அந்த ரிஷிகள். இதர தெய்வங்கள், மற்றவர்கள் எவருமே என்னால்தான் உருவாக்கப்பட்டவர்கள். இந்த எனது புகழை அறிந்து கொண்டவன் எவனுமே யோகத்தில் நிலைத்து நிற்பான். ஞானிகள் இதை எளிதாகப் புரிந்து கொள்வார்கள். அவர்கள் எண்ணங்கள் எல்லாமே என் மீது நிலைத்து நிற்கும். என்மீது பக்தி கொண்டவர்களாக இருப்பார்கள். அவர்கள் பிறருக்கு எல்லாம் எடுத்துரைப்பார்கள். அவர்கள் எப்பொழுதும் என்னைப் பற்றியே பேசுவார்கள். அதில் அவர்கள் மகிழ்ந்து கொண்டிருப்பார்கள். மற்றும் பக்தியில் திளைத்திருப்பார்கள். ஆதலால் யோகம் கற்கும்பொழுது என்னிடம் வருகிறர்கள். அவர்களுடைய் ஆன்மாவில் நான் இருக்கிறேன். அவர்கள் அஞ்ஞானத்தைப் போக்குகிறேன். ஞானத்தை அளிக்கிறேன். அவர்களை என்னுடன் இருக்கச் செய்கிறேன்.

"நமது வாழ்க்கை: எல்லாவற்றிற்கும் மேலான ஒரு பரம சக்தியை ஒரு சூத்திரத்தால் விளக்கிச் சொல்லி விட முடியாது. அல்லது வெறும் தர்க்க வாதத்தால் நிரூபித்து விட முடியாது. ஐன்ஸ்டீன் தனது சூத்திரமான $E=MC^2$ என்ற கணிதக் கோட்பாட்டை விவரிக்கும் முன் உலகம் அதை அறிந்திருக்கவில்லை. ஜனங்கள் அதைப் பார்த்திருந்தால் எள்ளி நகைத்திருப்பார்கள். ஆனால் இன்றைக்கோ! ஒரு கணினி இணைப்பைக் காட்டி விளக்கச் சொன்னால் உங்களால் முடியாமற் போகலாம். ஏன்? ஏனென்றால் நாம் எதையும் படித்துப் புரிந்து கொள்ள வேண்டும். அதன் பின் நம்மால் அதை விளக்கிச் சொல்ல முடியும். ஒரு சிறிய கணினி இணைப்பையும் வடிவமைப்பு வரைபடத்தையும் புரிந்து கொள்ள 4 அல்லது 5 வருடங்கள் பிடித்தால், இந்த உலகத்தில் எல்லா உயிரினங்களையும் படைத்தவரைப் பற்றி சில நாட்களிலோ, மாதங்களிலோ அல்லது வருடங்களிலோ புரிந்து கொள்ள முடியுமா? .. ஆகவே நாம் ஏன் எதையும் எள்ளி நகையாட வேண்டும் அல்லது பிறரை நம்பாமல் நகைக்க வேண்டும்? நமக்கோ அதைப் பற்றி ஒன்றும் தெரியாதே! ஆகவே அவரை நாம் புரிந்து கொள்ள எண்ண ஆரம்பித்தால், நாட்களிலோ, மாதங்களிலோ அல்லது வருடங்களிலோ கூட முடியாது என்று தெரிகிறது அல்லவா? இல்லை. அப்படி அல்ல. ஒரு நிமிடமோ அல்லது நாளோ கூடப் போதும் அவரைப் புரிந்து கொள்வதற்கு. ஏனென்றால் அவர் உங்களை தனியாக விட்டு விடுவதில்லை. அவர் எப்பொழுதுமே

உங்களுடன்தான் இருக்கிறார். சிக்கல் மிகுந்த எல்லா பிரச்னைகளுக்கும் தீர்வு உங்கள் மனத்திலிருந்துதான் வருகின்றன. கேள்விகள் கேட்டு உங்கள் மனத்தையே விடை காணச் சொல்லுங்கள். உங்கள் மனத்திலேயே எல்லா இரகசியங்களும் அடங்கி இருக்கின்றன. கண்டுபிடிப்புக்களும் அடங்கி இருக்கின்றன. பதில்களும் அடங்கி இருக்கின்றன. எல்லாமே உங்களுக்குள் உள்ளடங்கியவை. கொஞ்சம் சிரத்தையுடன் தேடுங்கள். கிடைத்து விடும். சந்தோஷமாகப் பெற்றுக் கொள்ளுங்கள். இந்த விஷயத்தில் கூகிளைப் போன்ற தேடும் எஞ்சின்கள் உதவப் போவதில்லை. (உறுதியான உளளமும் தளராத நம்பிக்கையுமே இதற்கு அடிப்படை வழிமுறைகளைக் காண்பிக்கும்.

அர்ஜுனன் மேலும் பகவான் கிருஷ்ணரிடம் கேட்டான். பரமாத்மாவின் திவ்ய தரிசனங்களைப் பற்றி மேலும் கேட்டான். அவற்றை எல்லாம் தெரிந்து கொள்ள மிகவும் ஆசைப் பட்டான். அதை ;அடுத்து பகவான் கிருஷ்ணரும் பேச முறபட்டார். "ரிஷிகளுக்குள் எல்லாம் நானே நாரதர். நானே ஆரம்பமாகவும், மத்தியிலும் முடிவிலும் இருக்கிறேன். நானே எல்லா உயிரினங்களிலும் இருக்கும் உயிராக இருக்கிறேன். நானே சூரியனாகவும், சந்திரனாகவும் மற்றும் விஷ்ணுவாகவும் இருக்கிறேன். வேதங்களில் நான் சாம வேதமாகவும் இருக்கிறேன். உணர்வுகளில் நானே மனமாகவும் இருக்கிறேன். ருத்திரர்களில் நானே சங்கரராக இருக்கிறேன். மலைகளில் எல்லாம் நானே மேருவாக இருக்கிறேன். படைத் தலைவர்களில் நானே ஸ்கந்தராக இருக்கிறேன். எதையும் கடவுளுக்கு முன் அர்ப்பணிப்பதில் நானே பிரார்த்தனையாக இருக்கிறேன். படை ஆயுதங்களில் நானே முதன்மையாக அரசனாக இருக்கிறேன். பாம்புகளுக்குள் நானே வாசுகியாக இருக்கிறேன். நானே வருணனாக இருக்கிறேன். மற்றும் நானே யமனாகவும் இருக்கிறேன். நான் காற்று, நானே கடல்மீன்களில் பெரியதான ஒன்றாக இருக்கிறேன். நானே ஓடும் நதி கங்கையாக இருக்கிறேன். நானே தன்னைப் பற்றியே உணரக் கூடிய விவேகமாக இருக்கிறேன். அதாவது நானே ஆத்ம ஞானத்தை உடையவனாக இருக்கிறேன். நானே எதற்கும் ஆரம்பமாக இருக்கும் அட்சரமான "அ " வாக இருக்கிறேன். நானே இறப்பு ஆவேன். நானே அதிர்ஷ்டமாக இருக்கிறேன். நானே எதையும் தாங்கிக் கொண்டு நினைவுகளின் மொத்த உருவத்தில் இருக்கிறேன். நானே மாதமாவேன். நானே மலராவேன். நானே ஏமாற்றுபவன். நானே சூதாட்டியாவேன். நானே முயற்சியின் மொத்த உருவாவேன். அதை அடுத்து ரிஷிகளைப் பற்றிப் பேசினார் நானே மனித முயற்சிகளின் உருவாவேன். நானே எல்லா கெட்ட பழக்கங்களின் உருவாவேன். நானே தண்டனையும் ஆவேன். நானே முழு அமைதியும் ஆவேன். நானே விவேகமும் அறிவும் ஆவேன். நானே ஒரு மரத்தின் விதையாவேன். நான் அசைவனவாகவும் இருக்கிறேன். நானே அசையாதனவாகவும் இருக்கிறேன். என் திவ்ய தரிசனங்களுக்கும் புனித உருவங்களுக்கும் எல்லையே இல்லை. நான் சொன்னவை எல்லாம் சில சில உதாரணங்களே. ஆனால் உயிருள்ளவையோ அல்லது உயிரில்லாதவையோ எல்லாமே என்னிடத்திலிருந்துதான் வருகின்றன. இந்த உலகமும் சரி, இந்த பிரபஞ்சமும் சரி என்னுள் இருக்கும் ஒரு அங்கங்களே ஆகும். ஆனால் எந்த ஒரு இடத்திலும் சரி, எதிலும் சரி, நான் ஒரு முழுமையான அங்கமாக இல்லாதவனாக இருக்கிறேன். மீண்டும் சொல்கிறேன் - நான் எத்துடனும் நெருங்கிப் பிணைக்கப்படவில்லை. நான் என் கடமையைச் செய்து கொண்டே செல்கிறேன்.

நமது வாழ்க்கை: நமது அன்றாட வாழ்க்கையில் நாம், நம்மைப் பற்றியே கேள்வி கேட்டுக் கொள்வதில்லை. 'நாம் யார்? நமது வாழ்க்கை என்றால் என்ன? நம்மை கட்டுப்படுத்துபவர்கள் யார்?" என்றெல்லாம் கேள்விகள் கேட்டுக் கொள்வதில்லை. நம்மைப் பற்றியோ அல்லது இந்த உலகத்தில் என்ன பங்கு வகிக்கிறோம் என்றெல்லாம் கேட்டுக் கொள்கிறேன். எந்த ஒரு கேள்வியையும் நம்மைப் பற்றி, நாம் கேட்டுக் கொள்வதில்லை. இந்த உலகத்தின் ஒரு அங்கமாக நாம் ஏன் இருக்கிறோம் என்றும் கேட்டுக் கொள்வதில்லை. இவ்வகை கேள்விகளைக் கேட்டுக் கொள்வதற்கு சிரமப்படுகிறோம். ஏனென்றால் இவற்றிற்கு எல்லாம் நமக்கு விடைகள் தெரியும். பொருட்களின் மீது நமக்கு உள்ள பற்றுதலை கொஞ்சம் கூடச் செய்யும். அது மட்டுமல்ல, பிறரோடு நாம் போடும் பொட்டிகளில் பின் தங்கி விடுவோமோ என்ற பயமும் நமக்கு உண்டு. இவ்வகை கேள்விகளை நான் ஏன் கேட்கவேண்டும் என்று கேட்கக் கூடிய பலர் இருக்கிறார்கள். நான் என் வாழ்க்கையில் சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். குழந்தைகள் உண்டு. எனக்கு செல்வங்களும் உண்டு. பின் ஏன் எதைப் பற்றியும் நான் கவலைப் பட வேண்டும்? தவிரவும் இந்தக் கேள்விகளை எல்லாம் கேட்டுக்கொண்டு இருப்பதில் நேரம் வீணாகத்தான் போகிறது. எதையும் புரிந்து கொள்வதை விட்டு விட வேண்டுமென்றாலும் சரி, அல்லது பரமாதமாவைப் பற்றி தெரிந்து கொள்வதை தவிர்த்தாலும் சரி, நல்ல காரியங்களைச் செய்து கொண்டு வாழ்க்கையை இப்படியே வாழ்ந்து கொண்டிருந்தாலும் சரி, எறுமைப் போல, குரங்கைப் போல, ஒனாயைப் போல, ஒரு தாவரத்தைப் போல அல்லது பறவையைப் போல அல்லது வேறு எந்த உயிரினத்தைப் போலவாவது வாழ்ந்தால், நீங்கள் சொல்வது முற்றிலும் சரி என்று ஒப்புக் கொள்கிறேன். ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட ஒரு வாழ்க்கையை வாழ்வீர்கள். உங்களுக்கும் மகிழ்ச்சி, சோகம், வெற்றி, தோல்வி என்று எல்லாம் வந்து சேரும். வேறு எவரும் அந்த பரமாத்மா நிர்ணயித்தபடி வாழும் வாழ்க்கையை வாழ ஆரம்பிப்பீர்கள். ஒரே ஒரு வேறுபாடு ஒன்றுதான் இருக்கும். அதாவது எவர் ஒருவர் பரமாத்மாவின் புனிதத் தன்மையை உணர்கிறார்களோ அவர்கள் எல்லோரும் மன அமைதி குன்றி வாழ மாட்டார்கள். எந்த ஒரு சமயத்திலும் எந்த சில சம்பவங்களும் அவர்களை பாதிக்காது. பிறந்த எல்லோருமே பரமாத்மா நிர்ணயித்தபடி வாழ்வதில்லை. அப்படி என்றால் இந்த வாழ்க்கைச் சூழலில் எந்தவித சமநிலையற்ற தன்மை இருக்கவே இருக்காது. ஏனென்றால் ஒவ்வொருவருமே பிறப்பே இல்லாத நிலையை அடைந்து விடுவர். இந்த பூமி வெகு வேகமாகச் சுழன்று கொண்டிருக்கிறது என்பதை நாம் எல்லோரும் அறிவோம். ஆனால் அந்த சுழற்சியை நாம் உணர்வதில்லையே. அதே போல் சூரியன், "உதிக்கிறது" என்கிறோம். "மேற்கே மறைகிறது" என்கிறோம். நம் எல்லைகள் அவைதான். பகவானை உணர்வதற்கு நல்ல தீர்மானமான உள்ளமும் நம்பிக்கையும் அவசியம் வேண்டும். அவை இல்லாமல், வாழ்க்கை என்று ஓடிக் கொண்டுதான் இருக்கும். அந்த வாழ்க்கையில் நடப்பது எல்லாமே, "நம்"முடைய செயல் என்று நம்பிக் கொண்டிருப்போம். அதனால், "அறியாமையே இன்பம்" என்று பெருமையாகப் பறை சாற்றிக் கொண்டு இருக்கலாம்.

ஆனால் பகவானைப் புரிந்து கொண்டவர்கள் மட்டும் பரமாதமாவின் எல்லையற்ற தன்மையேதான் எல்லாம் என்பது தெரியும். அவர்கள் வாழ்க்கையில் என்ன எதிர்பார்க்கிறார்கள் என்றும், ஜனங்களிடம் என்ன எதிர்பார்க்கிறார் என்பதும், செயல்பாடுகளில் என்ன எதிர்பார்க்கிறார்கள் என்றும் சுற்றிலும் பார்க்கக் கூடியவற்றோடு இருக்கும் எந்த உறவுகளும் சரி, எல்லாம் ஒரு முழுமையை

அடைந்தவை. ஆனால் அவரே தன் கடமையைச் செய்கிறார். தனக்குள்ளேயே இருக்கும் கடவுளை உணர்ந்து பார்க்கிறார்.

ஒரு வகையான மனப்பாங்கை அடைவது சுலபம். இது ஒரு சிலருக்கு சாத்தியப்படும். வேறு சிலருக்கு கொஞ்சம் அனுபவம் வேண்டும். இந்த மனம் என்பது ஒரு பழக்கத்திற்கு உட்படுவதாகும். அதன் செயல்பாடுகள் அப்படித் தான் இருக்கும். குற்றத்தை அடைப்படையாகக் கொண்ட திரைப்படங்களை ஒரு வருடத்திற்குத் தொடர்ந்து நீங்கள் பார்த்து வந்தால் போதும், நீங்கள் அதன் பின் பார்க்கும் இடமெல்லாம் குற்றம் புரியும் இடமாகவே தோன்றும். நீங்கள் மதத்தையே பிரசாரம் செய்யும் டி.வி. சேனல்களையே பார்த்து வந்தால், அவற்றைப் பற்றியே பேச ஆரம்பிப்பீர்கள்.

# அத்தியாயம் 11: பரமாத்ம சொரூபத்தின் யோகம்

எதிர்பார்ப்புக்களின் ஒரு சுருக்கம்: இந்த அத்தியாயத்தைப் படிக்கும் முன் எவருக்கும் கொஞ்சம் கற்பனை தேவை என்பதைச் சொல்கிறேன். ஆகவே இப்பொழுது நாம், "சூரியனை" மனத்தில் கற்பனை செய்து கொள்வோம். ஒரி சில வினாடிகள் எடுத்துக் கொள்வோம். சரியா? அந்த சூரியன் எவ்வளவு பெரியது என்று நினைத்துக் கொண்டோம். அது ஒரு காகித அளவு இருக்குமா அல்லது கட்டிட அளவா அல்லது ஒரு மலை போன்றதா? நம் கற்பனை ஒன்றும் அவ்வளவு பிரமாதமில்லை. உண்மையில் நேரிடையாக நாம் சூரியனைப் பார்க்கிறோம். வெகு தூரத்தில் இருக்கும் அந்த சூரியன். அது ஒரு காரின் டயரைப் போன்றதாக தோன்றுகிறது. ஆனால் பல லட்சம் அல்லது கோடி அளவு உங்கள் கற்பனையைவிட அது பெரியது. நீங்கள் நினைத்துக் கொண்ட அளவையே மேலும் 100 மடங்காக்கிப் பாருங்கள். அதன் பின் 1000 மடங்காகவும், அதன் பின் 2 மில்லியன்கள் மடங்காகவும் ஆக்கிப் பாருங்கள். அப்பாடியோவ்... நினைவு போதவில்லை. மூளையால் அந்த உருவத்தை ஜீரணித்து அறிய முடியவில்லை. மீண்டும் உங்கள் மூளையைத் தட்டிவிட நினைக்கிறீர்கள். இதுவே கற்பனையின் எல்லையும் உண்மையுமாகும். ஆனால் நாம் எவருமே நமக்கு மயக்கமாகத் தெரிந்த உருவங்களுடன்தான் வாழப் பிரியப் படுகிறோம். மீண்டும் சொல்ல வேண்டுமானால், இந்த கற்பனையின் சக்தி இந்த அத்தியாயத்தைப் படிக்கும் முன் உங்களுக்குத் தேவை என்பதை சொல்லி விடுகிறேன்.

அர்ஜுனன் இப்பொழுது பகவான் கிருஷ்ணரிடம் பதில் சொல்லும்பொழுது, தனக்கு இருந்த மயக்கமான நிலை இப்பொழுது இல்லை என்றான். ஒரு பொருள் விளங்காத நிலை விலகி விட்டது என்றான். பகவான் கிருஷ்ணரே எல்லாமாக இருப்பதை உணர்ந்து கொண்டான். அதை அடுத்து தான் பார்க்கும் எல்லா உருவங்களிலும் கடவுளையே பார்க்க விரும்பினான். அதாவது கடவுளே சொல்லி இருப்பது போன்ற ஒரு நிலையைக் காண விரும்பினான். ஒரு புனிதமான உருவம் லட்சோப லட்சம் வகையான பொருட்களை அதனுள் கொண்டது என்றார். வெவ்வேறான நிறங்கள், வெவ்வேறான வடிவங்கள் மற்றும் கடவுள்கள், உயிரினங்கள் மற்றும் எல்லாமே அவற்றுள் இருக்கின்றன. அவற்றை எல்லாம் எவரும் இதற்கு முன் பார்த்ததே இல்லை. எதை எல்லாம் அர்ஜுனன் பார்க்க விரும்பினானோ , எல்லாமே, காலம், பூகோளம், இரகசியங்கள் மற்றும் உருவங்கள் - எல்லாவற்றையும் அர்ஜுனன் அதில் பார்க்க முடியும்., என்றார் பகவான் கிருஷ்ணர். அப்படி எல்லாவற்றையும் பார்ப்பதற்கு அர்ஜுனனுக்கு ஒரு புனிதமான பார்வை ஒன்று வேண்டும் என்றார், பகவான் கிருஷ்ணர். அதையும் அவனுக்கு பகவான் கிருஷ்ணர் அளித்தார். அதன் பிறகு எங்கெங்கும் என்றென்றும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் உருவத்தை அர்ஜுனனுக்கு பகவான் கிருஷ்ணர் காட்டினார். கால வரமப்ற்றதும் எதையும் உள்ளடக்கியதுமான அந்த உருவத்தை பகவான் கிருஷ்ணர் காட்டினார்.

"நமது வாழ்க்கை: எனக்கு இது முன்பே தெரியும். அந்தக் காட்சியைக் காண தனிச் சிறப்பு வாய்ந்த கண்ணாடிகள் தேவை என்றது போன்ற உண்மையை நான் அறிவேந். .. ஹ§ம்... அதுவும் சிறப்பான சில திரைப்படங்கள், முப்பரிமாணங்களைப் பார்க்க

உதவும் கண்ணாடிகளோடு பார்க்கவில்லைய் என்றால், என்னால் எதையும் பார்க்க முடியாது. உண்மையில் நாம் பார்ப்பனவெல்லாம், சற்றே புகை படர்ந்தாற்போல தெளிவாக இருக்காது. ஆனால் கண்ணாடியை அணிந்ததும் முப்பரிமாணம் தெளிவாகப் புலப்படும். அதே போல் படங்களை டீ.வி.யில் பார்க்கும்பொழுது, எல்லா நிகழ்வுகளையும் அந்த 9 திரைகளில் ஏதோ ஒரு தருணத்திலேயே பார்த்து அறிய முடியவில்லை. இருந்தாலும் அந்த சமயங்களில் டீ.வி.யில் எல்லா காட்சிகளும் ஓடிக் கொண்டுதான் இருக்கும். அதே போல் என் கண்கள் சுமார் 180 டிகிரிக் கோண விலாசத்தைக் காண வல்லது. ஆனால் அந்த பரப்பளவை முழுக்க என்னால் மனம் குவித்துப் பார்க்க முடியாது. அவற்றை மனம் எப்படியோ புரிந்து கொள்ளும். இருட்டில் என் கண்களுக்கு எதுவும் புலப்படாது. ஆனால் சிறப்பான ஒரு பைனாகுலரால் எல்லாவற்றையும் காண முடியும். இத்தனைக்கும் கண்களைப் போல ஒரு தானியுங்கியான வகையில் குவித்துப் பார்க்கக் கூடிய லென்ஸ் வேறு ஒன்றும் கிடையாது. இதைப் போல வேறு ஒன்று இன்னமும் உருவாக்கப்படவில்லை. இப்பொழுது எனக்குப் புரிகிற்து - அர்ஜுனனுக்கு ஏன் சிறப்பான ஒரு புனித கண் தேவைப்பட்டது என்று ..."

அந்த எல்லையற்ற உருவம், பல்லாயிரம் வாய்களைக் கொண்டதாக இருந்தத். பல்லாயிரம் கண்களைக் கொண்டதாக இருந்தது. அதன் மேல் எங்கு பார்த்தாலும் புனித நகைகளையே கண்டான் அர்ஜுனன். ஆயிரம் ஆயிரம் கைகளில் எண்ணற்ற ஆயுதங்கள். அந்தக் கைகளில் எத்தனையோ மாலைகளையும் எண்ணற்ற நிறங்கள் கொண்ட ஒளியையும் கண்டான். ஏதொஒ ஆயிரம் ஆயிரம் சூரியன்கள் எல்லாம் ஒரே இடத்தில் கூடியது போலத் தோன்றியது. எங்கு பார்த்தாலும் ஆயிரம் ஆயிரம் முகங்கள். அதில் அர்ஜுனன் எண்ணற்றவற்றைப் பார்த்தான். பகவானைப் பார்த்து சொன்னான். "எல்லா தெய்வங்களையும் நான் உன்னிடத்திலேயே பார்க்கிறேன். பல எண்ணற்ற வகையான முகங்களைப் பார்க்கிறேன். எத்தனையோ கைகள், வயிறுகள் பார்க்கிறேன். எந்த இடத்தில் ஆரம்பம் என்று தெரியவில்லை. எங்கு மத்திய நிலை இருக்கிறது என்றோ முடிவு எங்கு என்றோ என்னால் காண முடியவில்லை. எந்த ஒரு இடத்தை நான் மேற்கோளாகக் காட்ட முடியும் என்று தெரியவில்லை. எந்த கோணத்தை நான் பிறருக்கு எடுத்துச் சொல்லலாம் என்றும் தெரியவில்லை. எல்லாமே எங்கும் பரவி நிற்கிறது. ஆயிரம் ஆயிரம் மலர்கள், ஒளிக் கீற்றுக்கள் எல்லாம் எங்கெல்லாமோ பரவி நிற்கின்றன. அவை எல்லாவற்றையும் வேதமே உருவாக்கியது. அவை எல்லாவற்றையும் நீக்க முடியாது. சூரியனையும், சந்திரனையும் மற்றும் எத்தனையோ கிரகங்களையும் நான் பார்க்க முடிகிறது. இவை எல்லாவற்றையும் உங்கள் உடம்பிலே பார்க்கிறேன். அங்கிருந்துதான் இந்த பூவுலகத்திற்கு வரும் தீ, காற்று, நீர் - இவற்றின் முகங்களை நான் உங்கள் உடம்பில் பார்க்கிறேன். அந்த உருவம் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. அதே சமயத்தில் பிரமிப்பையும் பயத்தையும் ஊட்டுகிறது. முனிவர்கள் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பார்க்கிறேன். இராட்சசர்கள் எங்கேயோ கொன்று குவித்துக் கொண்டிருக்கிறார்கள். படை வீரர்கள், மிருகங்கள், தொழிலாளர்கள், பறவைகள், பாம்புகள், நல்ல காரியங்கள் மற்றும் எத்தனையோ உங்கள் வாயிருந்து வரக் கூடியவை எல்லாவற்றையும் பார்க்கிறேன். என் சொந்தக் காரர்கள் யாவரும் உன் வாய்க்குள் சென்று மடிந்து கொண்டிருக்கிறார்கள். நல்லவர்களும் சரி கெட்டவர்களும் சரி, வெவ்வேறான வகையில் நடத்தப்படுவதை நான் பார்க்கிறேன். அவர்களுக்கு வேறொரு வாயில் புதிய பிறப்புக்கள்

உண்டாவதைப் பார்க்கிறேன். இந்த உலகத்தின் கடந்த கால நிகழ்வுகள் எல்லாவற்றையும் நான் பார்க்கிறேன். தீப்பிழம்பு போல இருக்கும் உங்களுடைய நெருப்பான முகத்தை பார்க்கிறேன். எல்லா உயிரினங்களையும் அது அழுக்கும். இவற்றை எல்லாம் நான் பார்த்து பிரமிப்பும் பயமும் கொள்கிறேன்.

அர்ஜுனன் கண்ட விஸ்வரூபம்

"நமது வாழ்க்கை: அர்ஜுனன் என்பவன் என்னையும் உன்னையும் அல்லாது வேறு ஒருவனும் அல்ல. அவனே கடவுளின் இந்த பரமாத்ம சொரூபத்தைப் பார்த்தவன். அவனால் அந்தக் காட்சியைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஒருவேளை அந்தக் காட்சியை மேலும் ஒரு திண்மையுடன் தெளிவாகப் பார்க்க ஒரு உபகரணம் வேண்டுமோ என்னவோ? அல்லது அதை விட சிறந்தது ஒன்று வேண்டுமோ? நிச்சயம் இப்பொழுது இருப்பதை விட அது மேம்பட்டு இருக்கும். ...இப்பொழுது என்னைக் காட்டும் அந்த பரமாத்ம சொரூபமானது அது ஒரு டிஸ்னியின் படத்தைப் பார்ப்பதை விட மேலாக இருக்கிறது. அல்லது ஒரு அவதாரத்தைக் காட்டும் திரைப்படத்தை விட மேலாக இருக்கிறது. அதிலிருந்து வரும் ஒளி மிக் மிக கவர்ச்சியாகவும் கண்கொள்ளாக் காட்சியாகவும் இருக்கிறது. வானிலிருந்து பூமி வரை நீண்டு இருக்கிறது. பரமாத்மாவுக்கு ஆயிர்ம் ஆயிரம் முகங்கள் - ஒவ்வொன்றும் வெவ்வேறு நிறத்தில் - இருந்தன. ஒவ்வொன்றும் வெவ்வேறு நிறத்தில் சருமத்தைக் கொண்டதாக இருந்தன. செயல்பாடுகளும் வேறு, உருவமும் வேறாக இருந்தன. அதில் நாம் ஒரு முகத்தில் அட்லாண்டிக் சமுத்திரத்தையும் பசிபிக் சமுத்திரத்தையும் பார்க்க முடிந்தது. மற்றொன்றில் இமாலய மலையையும் ஆல்ப்ஸ் மலையையும் இன்னொரு முகத்தில் பார்க்க முடிந்தது. பனிவிழும் ஆர்க்டிக்கை ஒரு முகத்தில் பார்க்க முடிந்தது. இன்னொரு முகத்தில் சஹாரா பாலைவனத்திலிருந்து காலஹரி பாலைவனம் வரை பார்க்க முடிந்தது. எல்லா அணு ஆயுதங்களையும் ஒரு முகத்தில் பார்க்க முடிங்ஹது. எரிமலைகளை எல்லாம் மற்றொரு முகத்தில் பார்க்க முடிந்தது. இப்படி எத்தனை எத்தனையோ. அத்துடன் எல்லா 500 கோடி மக்களையும் ஒரே வீச்சில் ஒரே சமயத்தில் பார்க்க முடிந்தது. அவர்களுடைய கடந்த கால சரித்திரங்களை எல்லாம் பார்த்து அறிய முடிந்தது. அவர்களுடைய எதிர்காலங்களையும் பார்த்து அறிய முடிந்தது. எல்லா மிருகங்களையும் ஒன்று விடாமல் பார்க்க முடிந்தது. அவர்களுடைய கடந்த கால வாழ்க்கையும், எதிர்கால வாழ்க்கையையும் பார்க்க முடிந்தது. அதே போல் தாவரங்கள் எல்லாவற்றையும் பார்க்க முடிந்தது. இந்த பூமிக்குக் கீழே உள்ள நிலங்களையும் சரி, மற்றவற்றையும் என்னால் பார்க்க முடிந்தது. , இந்த பிரபஞ்சத்தில் உள்ள எல்லா கிரகங்களையும் பார்க்க முடிந்தது. அவற்றிற்கும் அப்பால் விவீறீளீஹ் ஷ்ணீஹ் எனப்படும் பால்வழி நட்சத்திரக் கூட்டத்தைப் பார்க்க முடிந்தது. அங்கு உள்ளது உள்ளபடிக் காண முடிந்தது. ஜீஸஸ், நபி நாயகம், விஷ்ணு, புத்தர் போன்றவர்களை எல்லாம் நான் பார்த்தேன். கிரேக்க கடவுள்களைப் பார்த்தேன். புனித முங்களை எல்லாம் தரிசித்தேன். எல்லா வேதங்களிலும் இருக்கும் அத்தியாயங்களை எல்லாம் அந்த ஒரே கணத்தில் படித்தேன். அது மட்டுமல்ல. ஸ்விஸ் வங்கியில் உள்ள இரகசிய கணக்குகளைப் பார்த்தேன். கோடீஸ்வரர்களின் இரகசிய எண்களையும் அறிவேன். இந்த பூமியின் எதிர்காலத்தைப் பார்த்தேன். இந்த உலகத்தின் கடந்த காலத்தை பார்த்தேன். லட்சோப லட்சம் ஆண்டுகளுக்கான சரித்திரத்தை அங்கு பார்த்தேன். அதை எல்லாம் ஒரே வினாடியில் நான் பார்த்தேன். இதுவரை காணாத நிறங்கள், கண் கொள்ளாக் காட்சியாகப் பார்த்தேன். லட்சோப லட்சம் பசு மாடுகள், லட்சோப லட்சம் பாகிடிரீயாக்கள், எல்லாவற்றையும் ஒரே கணத்தில் பார்த்துத் தீர்த்தேன். ஏழைகள் உணவுக்காக அலைந்ததைப் பார்த்தேன்,

வன்முறையையும் பார்த்தேன், கோடீஸ்வரர்கள் பணத்தைக் குவித்து தம் அலமாரிக்களில் வைத்து சீரழிய விட்டதைக் கண்டேன். அவை எல்லாம் அவர்களுடைய கல்லறைகளில் இருந்த அலமாரிக்கள். பங்கு மார்க்கெட்டுக்கள் சரிவதைப் பார்க்கிறோம். மோட்டார் வாகனங்களிலிருந்து எழும் மாசுப் புகைகளைப் பார்க்கிறோம். நமது பெற்றோர்கள் பிறப்பதையும், இறப்பதையும் பார்க்கிறோம். குழந்தைகளின் பிறப்பையும் இறப்பையும் பார்க்கிறோம். நமது பிறப்பையும் இறப்புக்களையும் பார்க்கிறோம். உங்கள் கற்பனை இது வரை நீடித்திருந்திருக்கும். அது முடிந்து கூட விட்டிருக்கும்.

. அர்ஜுனன் பகவான் கிருஷ்ணருக்குச் சொல்லிக் கொண்டிருந்தான். கடவுள்களின் உருவங்களையும், நெருப்பையும், கொலைகளையும் அழிவையும் மீண்டும் உருவாக்குதல்களையும் உன்னிடம் நான் கண்ட பிறகு நிலையில்லாமல் தவிக்கிறேன். என்மீதே எனக்கு அமைதி இல்லாமல் போயிற்று. என் வீரர்கள் யாவரும் சரி, என் மூதாதையர்களும் சரி, அழிக்கப்பட்டு விட்டார்கள். அவர்கள் உன்னிடம் வந்து சேர்ந்து விட்டார்கள். இந்த வழியிலே ஒரு சிலருக்கு மிக மோசமான அனுபவங்கள் கிட்டி விட்டன. எப்படி எல்லா நதிகளும் கடலை நோக்கிச் செல்கின்றனவோ எல்லா வீரர்களும், பிரபல மனிதர்களும் சரி, உன் வாய்க்குள் சென்று நுழைந்து தங்கள் அழிவைத் தேடிக் கொள்கிறார்கள். எங்கு பார்த்தாலும் நெருப்பைக் கக்கிக் கொண்டிருக்கும் முகங்கள். இதே தீ எரிந்து கொண்டிருக்கும் முகங்களை உன்னிடம் பார்த்திருக்கிறேன். அதே முகத்தோடு நீயும் எனக்கு பதிலளித்தாய். " நானே அழிவுமாவேன். நானே காலத்தின் முடிவும் ஆவேன். இந்த உலகத்தை அழிப்பதில் என் நேரத்தைச் செலவழித்துக் கொண்டிருக்கிறேன். அதில் உள்ள உயிருள்ளவறையும் சரி, உயிரில்லாதவற்றையும் சரி அழிப்பதில் முனைந்திருக்கிறேன். அதை ஒவ்வொரு கணத்திலும் செய்து கொண்டிருக்கிறேன். அர்ஜுனனே போரில் ஈடுபடாவிட்டால் கூட, கௌரவர்களும் அவர்களுடைய ஆதரவாளர்களும் நிச்சயம் கொல்லப்பட்டு விடுவார்கள். அர்ஜுனன் இந்த நிகழ்வுக்கெல்லாம் ஒரு சிறு ஆயுதம் போல. அவர்கள் எல்லோரையும் கொல்லப் போவது அர்ஜுனன் அல்ல. பகவான் கிருஷ்ணர் அவர்களை ஏற்கனவே கொன்று விட்டார். அந்த அழிவு ஒரே ஒரு கணத்தில் ஏற்படப் போகிறது. அர்ஜுனன் பகவானை அடி பணிந்து வணங்கினான். இப்பொழுது எனக்குப் புரிகிறது - உங்களை ஏன் எவருமே புகழ்ந்து வருகிறார்கள் என்று எனக்குப் புரிகிறது. ரிஷிகள் உன்னையே நோக்கி பிரார்த்தனை செய்கிறார்கள். நீங்களோ அழிவற்றவர். நீங்களே எல்லா கிரகங்களுமாக ஆவீர்கள். உங்களிடமிருந்துதான் எதுவுமே உருவாகி வருகின்றன. உங்கள் முன் பக்தி சிரத்தையுடன் நான் வணங்குகிறேன். வெவ்வேறு சமயங்களில் உங்களை வெவ்வேறான நாமங்களும் நமஸ்கரித்து வந்திருக்கிறேன். உங்களை வெகு சாதாரண மனிதராகவே பார்த்து வந்திருக்கிறேன். ஒருவேளை சில சமயங்களில் உங்களை நான் கேலியாகவோ கிண்டலாகவோ கூடப் பேசி இருக்கலாம். என்னை மன்னித்து விடுங்கள். நீ9ங்களே இந்த பிரபஞ்சத்தின் தந்தையாவீர்கள். நீங்களே இந்த உலகின் மஹா பெரிய குருவாவீர்கள். நீங்களே பரப் பிரும்மம் ஆவீர்கள் என்பதை நான் அறிவேன். உங்கள் உருவத்தைப் பார்க்கும்பொழுது நான் எல்லையற்ற மகிழ்ச்சி அடைகிறேன். இப்பொழுது உங்களை மிக சாந்தமான சொரூபத்தில் நான்கு கரங்களுடன் பார்க்க விரும்புகிறேன். அது என் மனத்திற்கு அமைதியைக் கொடுக்கும். அந்த உங்கள் சொரூபத்தை தயவுசெய்து இப்பொழுது எனக்குக் காட்டுங்களேன். " என்னுடைய பரமாதம சொரூபத்தை, எல்லாவற்றையும் அடக்கிய ஒரு பெரும் சுவரூபத்தை நீ

பார்த்து விட்டாய். இதுவே என்னுடைய மூல சுவரூபம். இதை வேறு எவரும் ஊன்றிப் பார்த்ததில்லை இதற்கு முன்பு. இதை எந்த பூஜை புனஸ்காரங்களால் பார்த்திருக்க முடியாது. இந்த உருவத்தை உன் ஒருவனால்தான் பார்க்க முடிந்தது. இதற்காக நீ பயந்து விட வேண்டாம். குழம்பிப் போய் விட வேண்டாம். நீ கேட்ட உருவத்திற்கு என்னை நான் மாற்றிக் கொள்ளவும் முடியும்." என்றார் பகவான் கிருஷ்ணர். இதை அடுத்து அர்ஜுனனுக்கு நான்கு கரங்களுடன் கூடிய பரம சுவரூபத்தைக் காட்டினார்.

"நமது வாழ்க்கை: 7 அடி உயரமுள்ள ஒரு மனிதனைப் பார்க்கும்பொழுது - அடர்ந்த தோள்களை உடையவனாக 46 அங்குலம் அகலம் கொண்டவை - நம்மைக் கடந்து செல்லும்பொழுது, நமக்கு எங்கேயோ கொஞ்சம் பயம் தோன்றத்தான் செய்கிறது. ஒரு கடலுக்கு முன் அமர்ந்து அலைகளைப் பார்க்கும்பொழுது, நன்றாகவே இருக்கிறது. பெரும் அலைகள் எழும்பி வருகின்றன. நமக்கு நரம்புகள் புடைத்து பயமுறுத்துகின்றன. சாலைகளில் நடந்து செல்லும்பொழுது, திடீரென்று எங்கிருந்தோ ஒரு பெரும் ஓசை எழுகிறது என்று வைத்துக் கொள்வோம். இரு வாகனங்கள் ஒன்றுக் கொன்று மோதிக் கொண்டு விட்டன. சில மனிதர்கள் இறந்து விழுந்து கிடைக்கிறார்கள். இரத்த வெள்ளத்தில் கிடக்கிறார்கள். மீண்டும் நரம்புகளில் வலியும் சோகமும். நாம் அவ்வளவுதான் என்றாலும், எங்கிருந்தோ வந்து விட்ட கடவுளை பார்க்கிறோம். அவர் அவ்வளவு அளவிட முடியாதவர் அல்ல என்று தெரிகிறது. (ஓ! மனிதர்களுக்கு அளவுகோல் என்று ஒன்று வேண்டுமல்லவா? இல்லாவிட்டால் அளப்பது முடியாமற் போய் விடுமே. உதாரணத்திற்கு 2000 மீட்டர்களுக்கு மேல் (6000 அடிகள்) அதுவும் எத்தனை தலைகள், எத்தனை கைகளும், கால்களும் - எப்படி இருக்கும் அந்தக் காட்சி? உங்கள் வாழ்க்கையிலேயே மிக நெருக்கமான ஒருவரை நினைத்துக் கொள்ளுங்கள். அவருடைய பணி இப்பொழுது மாறி விட்டது. அன்றாடம் அவர் குறைந்தது 2 நபர்களையாவது கொல்ல வேண்டுமென்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது அவர்கள் உங்களை வந்து பார்ப்பார்கள். அவரைப் பற்றி நீங்கள் அப்பொழுது என்ன நினைப்பீர்கள் - அதுவும் இந்த ஒரு செயல்பாட்டைச் செய்ய வரும்பொழுது எப்படி நினைப்பீர்கள். ஆகவே எப்பொழுதுமே நமக்குப் பிடித்த செயல்களிலேயே ஈடுபட்டுக் கொண்டிருக்கும் கடவுளை நாம் திடீரென்று அவருடைய அழிக்கும் சுபாவத்தைக் காண்கிறோம். அது நமக்கு சாதாரண செயலாகவா தோன்றுகிறது? இல்லை. இல்லவே இல்லை. கொஞ்சம் எலுமிச்சை சாறு கொஞ்சம் ஐஸ்கட்டிகள், - இவற்றை அப்பொழுது வேண்டுவோம். ஒரு சிலர், 'உம்! எல்லாம் நன்றாகவே இருக்கிறது' என்பார்கள். நாமும் பகவானுடைய எல்லாம் சூழ்ந்த உருவத்தைக் கொஞ்சம் நினைத்துப் பார்த்தோம்,. இந்த ஒரு கற்பனை எல்லாம் அவருடைய மஹா சக்தியே. அவரில்லாமல் இந்த கற்பனை எழுந்திருக்கவே எழுந்திருக்காது. அர்ஜுனன் வேறு யாருமில்லை. நீயும் நானும் போல ஒருவன்தான். கடவுள் தன் சுய விஸ்வரூபத்தைக் காட்டி விட்டார். அப்படி ஒரு விஸ்வரூபத்தைக் காட்டி விட்டு இருக்கும்பொழுது அவருடைய சாந்த சுவரூபத்தை நான்கே கைகளோடு பார்க்க வேண்டும். ...நம்மால் இப்பொழுதும் கற்பனை செய்து கொள்ள முடிவதுதான். ஆகவே நானே அதை உனக்குத் தருகிறேன்... அதைப் பற்றி வாழ்க்கை முழுவதும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டாம்.

# அத்தியாயம் 12: பக்தி யோகம்

பரமாத்மாவின் வெகு உயர்ந்த நிலையை உணர்ந்து அவரை அடைவதற்கு சிறந்த வழி என்ன என்பதை தெரிந்து கொள்ள விரும்பினான். அவருக்கு மிகவும் பிடித்தமானவர்கள் யார் யார் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினான். 'என்னை எவர் எவரெல்லாம் பூஜித்து வருகின்றனரோ, என் மீது தளராத நம்பிக்கை வைத்து பக்தி செலுத்தி வருகின்றனரோ, அவர்களே மிகவும் முழுமை பெற்ற மனிதர்களாவார்கள். மற்றவர்களுள், எவரெல்லாம், ஐம்புலன்களை அடக்கி பிறருக்கு நன்மைகளையே செய்து வருபவர்கள் எல்லோரும் கூட என்னை எளிதாக வந்தடைவார்கள்' என்றார் பகவான் கிருஷ்ணர். தன்னை அடைவதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன என்றும் அவர் மீது ஒரே நிலையாக பக்தி கொண்டு, அவருடனேயே மனத்தில் இருந்து விடுவதும் ஒரு வழி. அதுவே சாத்தியப் படவில்லை என்றால், ஒரு பக்தி மார்க்கமான சேவை செய்து வாழலாம். தான் செய்யும் செயல்பாடுகளின் பலன்களை அவரிடம் விட்டு விடலாம். அதுவும் சரிப்பட்டு வரவில்லை என்றால், அவர் மீது இருக்கும் அறிவைப் பெருக்கிக் கொள்ளலாம் என்று கூறினார்.

"நமது வாழ்க்கை: நமது நாடான இந்தியாவில், குறைந்த பட்சம், கடவுளை எத்தனையோ உருவங்களில் தொழுது வருகிறோம். கல்லிலிருந்து மிருகங்கள் வரை, அவற்றிலிருந்து மேலும் பெரிய பெரிய மனித உருவங்கள் என்று வணங்கி வருகிறோம். இந்த வழிகள் எல்லாம் கடவுளை ஒவ்வொரு உருவத்திலும் காண முடியும் என்பதை நம்புவதற்காகவே செய்யப்படுகிறது. ஒரு சில பழக்க வழக்கங்கள் ஜனங்களை பக்தி வழியில் மனத்தைச் செலுத்துவதற்காகவே உபயோகப்படுத்தப் படுகின்றன. ஒரு மாத காலத்திற்கு ஒரு விழா நடத்துதல், ஒரு மாத காலத்திற்கு பிரார்த்தனைகள் என்று செய்வது நம் பழக்கம். அடிப்படையாக இந்த முறைகள் மூலம் மக்களின் மனத்தை இடைவிடாது மாற்ற முனைவதே அவற்றின் நோக்கம். . அத்துடன் கடவுளின் உருவங்கள் பெரும்பாலும், மகன், தாய், தந்தை போன்றவர்களின் குடும்ப அமைப்பாகவே இருக்கும். இவை எல்லாம் ஒரு குடும்பத்தின் கட்டுக் கோப்பான ஒரு அமைப்பையே கடவுள்களிடம் காண்பித்து, அவர்கள் எல்லோரும் ஒரு குடும்பத்தின் மேலான அமைப்பையே கொண்டுள்ளவர்கள் என்பதைக் காண்பிப்பதே. ஆஸ்ரமம் அல்லது மடம் ஒன்றிற்குச் சென்றால், அங்கு வேதங்கள் கற்பிக்கப்படுவதும், பூஜை புனஸ்காரங்கள் செய்வதையும் பார்க்கிறோம். ஹிமாலய பிரதேசங்களில், யோகிக்கள், வாழ்க்கையில் எந்த பற்றையும் துறந்தவர்கள், வாழ்க்கையில் ஈடுபாடு இல்லாதவர்கள், பெரும்பாலும் தியானத்திலேயே வாழ்பவர்கள் போன்றவர்களைப் பார்த்து அறிகிறோம். நம்மைப் போன்றவர்கள் கடவுளைப் பற்றி கேட்டு அறிவதில் பெருமை அடைகிறோம். அவர் என்ன உருவத்தவர்? அவர் ஏன் அப்படி இருக்கிறார், என்று மேலும் சில வாதங்களைச் சொல்லி அறிய முற்படுகிறோம். அந்த துறையில் நம்முடைய அறிவைப் பெருக்கிக் கொள்ளவே முனைகிறோம். (அதைப் போல மத விஷயங்கள் பேசப்படும் கூட்டங்களுக்கும் சென்று பிரார்த்தனைகள் செய்து நமது அறிவைப் பெருக்கிக் கொள்ள முனைகிறோம்.) ஒரு சிலர் பிறருக்கு சேவை ச்செய்வதில் நம்பிக்கை கொண்டு செய்கிறார்கள். கடவுளுக்கு சேவை செய்வதிலும் நற்பணிகளைச்

செய்வதிலும் அக்கறை கொள்கிறார்கள். எல்லாமே கடவுளை அடையும் வழிகள்தாம். அதாவது அந்த பரமாத்மாவை அடையும் வழிகளே.

எத்தனை எத்தனையோ விளம்பர பலகைகளைப் பார்க்கிறோம். தர்மத்திற்காகக் கொடுக்கப்படும் பொருட்களைப் பற்றிய விளம்பரங்களைப் பார்க்கிறோம். தர்ம கைங்கர்யங்கள் செய்யும் ட்ரஸ்டிகளின் பெயர்களை ஆங்காங்கே கவனிக்கிறோம். கோவில்கள் ஆங்காங்கே ஒவ்வொரு தெருவிலும், ஒவ்வொரு சமூகத்திற்கும் என்று கட்டப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். அதாவது கடவுள் அந்தந்த தெருவினருக்கும் சமூகத்திற்கும் நன்மைகள் செய்ய வேண்டும் என்று வேண்டுகிறார்கள். அது மட்டுமல்ல, பூஜை புனஸ்காரங்கள் செய்து - கீதையில் சொல்லப்பட்ட கொள்கைகள் பிரகாரம் பூஜைகள் செய்து - மதக் கூட்டங்கள் நடத்தி, மக்களோடு தொடர்புகள் பல ஏற்படுத்திக் கொண்டு தம் இடங்களில் எல்லாம் இவ்வகை கூட்டங்களை நடத்துவதில் பெருமை கொண்டு வாழ்கிறார்கள். இவற்றை எல்லாம் செய்வதினால், ஏற்கனவே நாம் எல்லோரும் அவரை அடையும் வழிகளைத் தவற விட்டு விட்டோம். அப்படி இழந்ததினால் அவரைப் பற்றிய நினைவுகள் வருவது கடினமாகிறது. (இப்படி எல்லாம் செய்வதினால் அதைத் தான் நாம் நிரூபித்துக் கொண்டு வருகிறோம்.)"

கிருஷ்ணா மேலும் அர்ஜுனனுக்குச் சொன்னார்: " எவரெல்லாம் வெறுப்பை உமிழ்ந்து விட்டு, பிறருடன் நட்புரிமை கொண்டு வாழ்கின்றனரோ, சுயச் செருக்கு (மீரீஷீ) இல்லாமல் வாழ்கின்றனரோ, எப்பொழுதும் ஒரு மனத் திருப்தியுடனும் சுய அடக்கத்துடனும், எவருடைய புத்தி என்மீதே எப்பொழுதும் படிந்து நிற்கிறதோ - இவ்வகைப் பட்டவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்களாக ஆகி விடுகிறார்கள். எவரெல்லாம் மகிழ்ச்சியோடு திளைக்காமலும் சரி, சோகப்படாமலும் சரி இருக்கிறார்களோ,எவருக்கெல்லாம் புண்ணிய பொருட்களும் சரி, புண்ணியமில்லாதவைகளும் சரி இரண்டிற்கும் அப்பால் பட்டு நிற்கிறார்களோ, மரியாதையோ அல்லது அவமரியாதையோ எதுவும் அவர்களை பாதிக்கவில்லையோ, புகழோ அல்லது புகழில்லாமையோ, எவருடைய மனமெல்லாம் அறிவிலேயே திளைத்திருக்கிறதோ மற்றும் எவரெல்லாம் பக்தி மார்க்கத்திலேயே தன் மனத்தைச் செலுத்தி வருகிறார்களோ - இத்தகைய மனிதர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள் ஆகிறார்கள். எவரெல்லாம் பக்தி மார்க்கத்தை பின்பற்றுகிறார்களோ நம்பிக்கையிலேயே ஊன்றி வாழ்கிறார்களோ, மற்றும் என்னை அடைவதையே வாழ்க்கையின் முக்கிய குறிக்கொள் என்று வாழ்கிறார்களோ - அவர்கள் எல்லோரும் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.

"நமது வாழ்க்கை: நமது நண்பர்களுக்கும் சொந்தக் காரர்களுக்கும் வாழ்க்கையில் ஏற்படும் நன்மைகளைப் பற்றியோ, பதவி உயர்வுகள் , கல்யாணங்கள், சொத்துக்கள் குவிவது பற்றி சிந்திக்காமல் இருக்க முடியுமா?... நிச்சயம் நம்மால் முடியும்... முதன் முதலில் நமக்கு நாமே மரியாதை செய்து பழகிக் கொள்ள வேண்டும். இரண்டாவது கடவுளின் பரமாதம் சொரூபத்தை விட வேறு ஒன்றும் இல்லை என்பதை உணர வேண்டும். பிற எதுவும் மதிப்பற்ற நிலையைக் கொண்டது. ... ஆகவே, முதலில் என்ன சொன்னோம்? நம்மை நாமே மரியாதைக்கு உரியவராக நடத்திக் கொள்ள வேண்டும். ... அதற்குக் காரணம், நமக்குள்ளேயேதான் கடவுள் இருந்து கொண்டிருக்கிறார்.

அதனாலேயே நீங்கள் முதலில் உங்களையேதான் மரியாதை செய்து கொள்ளுதல் வேண்டும்.

சுயச் செருக்கு என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கும் முக்கியமான உணர்வு. ஒரு எல்லைக்கு மேல் அது இருந்தால், ஒரு மிருகம் உங்களைக் காயப்படுத்துவது போல உங்களை அது காயப்படுத்தி விடும். நமக்குள் இருக்கும் ஒரு உணர்வு எப்பொழுதும் எதையும் ஒன்றோடு ஒன்றை ஒப்பிட்டு நோக்கியே பார்த்துக் கொண்டிருக்கிறது. நம்மில் ஒருவரே முக்கியமானவர், பிறரை விடப் பெரியவர் என்ற உணர்வோடு அது உலவச் செய்கிறது. ஒரு குறிப்பிட்ட சமூகமே ஒன்றைவிட மற்றொன்று பெரியது என்று நினைக்கத் தோன்றுகிறது. நாம் அவர்களை விட பெரியவர்கள் என்றோ தாழ்ந்தவர் என்றோ நினைக்க வைக்கிறது. ஒரு சிலர் பெரும் பிரபலஸ்தர்கள் செல்லும் பாதையிலேயே செல்ல நினைக்கிறார்கள். அப்படி அனுமதி மறுக்கப்பட்டால், அவர்களுடைய சுயச் செருக்கு தூண்டப்படுகிறது. எந்த ஒரு உரையாடலிலும் அவர்களுடைய கருத்தே, அபிப்பிராயமே அறுதியான ஒன்றாக இருக்க வேண்டும் என்று பிரியப்படுகிறார்கள். அடிப்படையாக ஒருவர் சுயப் பிரக்ஞை உடையவராக இல்லாவிட்டால் மற்றும் பிறரால் பெரும்பாலும் உதாசீனம் செய்யப்படுபவராக இருந்து விட்டால், இவ்வகை சூழல்களைச் சந்திப்பார்கள். தவறான வழியில் உபயோகப்படுத்தப்படும் சுயச் செருக்கு உணர்வு சம்பந்தப் பட்ட வகையில் ஒரு சமநிலையற்ற நிலையை அவரிடம் தோற்றுவிக்கிறது. அந்தப் பொய்மையான ஒரு நிலை, நமது பேச்சுக்களையும் செயல்பாடுகளையும் அர்த்தமற்றவைகளாக ஆக்கி விடுகின்றன. இறுதியில் இந்த நிலைமை நிலைநிறுத்த, பிறர் நீங்கள் பொய் சொல்ல வேண்டி இருக்கும். அல்லது பிறர் ஏதோ உங்களுக்கு தீங்கு விளைவிப்பதாகவே எண்ணிக் கொண்டிருக்க வேண்டும் (உண்மையைவிட அது பன்மடங்கு மேலாக இருக்கலாம்.) ... இந்த பொய்மை கலந்த சுயச் செருக்கை தவிர்க்க, உங்களை நீங்களே பரிசோதித்துக் கொண்டு பாருங்கள். பிறரிடம் குடிகொண்டிருக்கும் கடவுளைப் பாருங்கள். கடவுளின் செயல்பாடுகளில் நம்பிக்கை வையுங்கள். உங்களை எந்தவித புகழுக்கும் சரி, மரியாதை வார்த்தைகளோடும்சம்பந்தப் படுத்திக் கொள்ளாதீர்கள்.

. அப்படி ஒருவேளை அவற்றோடு உங்களை சம்பந்தப்படுத்திக் கொண்டு உங்களை நீங்கள் பார்க்க ஆரம்பித்தால் போதும், உடனே உங்க்ளுடைய சுயச் செருக்கைத் தூண்டி விட்டவர்கள் ஆவீர்கள். பெரும்பாலான சமயங்களில், எங்கெல்லாம் வன்முறையும் உறவு துண்டிக்கப்படுவதும் நடக்கிறதோ இந்த பொய்மையான சுயச் செருக்கே பிரதான காரண்மாக இருப்பதைக் காணலாம். இந்த குணத்தை விட்டு விட்டால், உங்கள் வாழ்க்கை மிக அருமையாக இருக்கும். (உங்களோடு உறவாடும் நண்பர்களோ, உறவினரோ போன்றவர்களும் சுகமான மனப்பாங்குடன் நடந்து கொள்வார்கள்.) அதைச் சொன்னதால், ஒரு முட்டாளின் வாழ்க்கையை வாழச் சொல்லவில்லை... அல்லது பிறர் எவரும் உங்களை ஏளனமாக நடத்துவதை அனுமதிக்கச் சொல்லவில்லை. ... எதுவெல்லாம் சரி என்று படுகிறதோ அதை உறுதியாக்ச் சொல்லி நிலைத்து நிற்கச் செய்து வாழுங்கள். அதுவே உங்களுடைய கடமை. ஆனால் எப்பொழுதும் அந்த சுயச் செருக்கு உணர்வோடு வாழ வேண்டாம்."

# அத்தியாயம் 13 : புலன் அல்லது களம் என்றால் என்ன? அதை அறிந்தவர் யார்? - அவர்களைப் பற்றிய யோகம்.

களம், அல்லது புலன் என்றால் என்ன என்று அர்ஜுனன் பகவான் கிருஷ்ணரைப் பார்த்துக் கேட்டான். அவற்றை அறிந்தவன் என்பவன் யார்? என்று கேட்டான். அறிவு அல்லது ஞானம் என்றால் என்ன என்று கேட்டான். ஆத்மாவின் சரீரமே அல்லது உடலே புலனாகும் அல்லது களம் ஆகும் என்றார் பகவான். இந்த உடலைப் பற்றியும் இந்தப் புலன்களைப் பற்றி அறிந்தவனுமே ஞானியாவான். அவற்றை அறிந்து கொள்வதே ஞானமாகும் அல்லது அறிவாகும். இந்த உடலுக்கு ஐந்து புலன்கள் இருக்கின்றன. அவை, சுயச் செருக்கு, புத்தி, 10 வகை புலன்கள், மனம், ஆசை, வெறுப்பு, மகிழ்ச்சி, வலி, புத்திசாலித்தனம், மரியாதை போன்றவையே அந்தப் புலன்கள் ஆகும். இவை எல்லாமே மனத்தோடு ஒன்றி இயங்கும்பொழுது செயல்பாடுகள் விளைகின்றன. பணிவு, அடக்கம், மன்னிக்கும் குணம், குருவின் மீது மரியாதை, தூய்மை, என்றைக்கும் நிலைத்து நிற்றல், சுயக் கட்டுப்பாடு, பொருட்களின் மீது பற்று வைக்காமல் இருத்தல், சுயச் செருக்கு இல்லாம, பிறப்பு - இறப்பைப் பற்றிய துல்லியமான அறிவு, வயது மூப்படைந்த காலத்தில் வரும் நோய்களும் வலிகளும், பிள்ளை, மனைவி, இதர குடும்ப அங்கத்தினர்களின் பாசத்திலிருந்து விலகி நிற்றல், பிடித்ததற்கும் பிடிக்காததற்கும் ஒரே விதமான மனப்பக்குவத்தோடு பார்த்தல், ஆத்மாவைப் புரிந்து கொள்வதில் என்றும் ஒரே நிலை, - இவை எல்லாம்தான் ஞானம் எனப்படும். இவற்றிற்கு எல்லாம் மாறுபட்டவை அஞானமாகும். எவன் ஒருவன் தன் உடலுக்கும் தனக்கும் வேறுபாடு உண்டு என்பதை அறிகிறானோ ஆனால் அந்த உடலே அவன் அறிவாகும் என்று அறிகிறானோ அவன் என்னை அடைந்து விடுவான்.

"நமது வாழ்க்கை: முகம் -பார்க்கும் கண்ணாடியைப் பார்க்கும்பொழுது ஒன்றை கவனித்திருக்கிறாயா? எத்தனை தடவை நாம் முகம் பார்த்தலஉம், ஒரே நாளிலேயே எத்தனையோ முறைகள் பார்க்கிறோம், மீண்டும் மீண்டும் நாம் முகம் பார்க்கும் கண்ணாடியைப் பார்க்க நினைக்கிறோம் அல்லவா? அதுவும் அலுவலக் கழிப்பறையிலோ அல்லது ஹோட்டல்களிலோ, ஆஸ்பத்திரியிலோ அல்லது கடைகளிலோ எங்கு வேண்டுமானாலும் சரி, நமது புலன்களை திருப்திப்படுத்திக் கொள்வதில் எவ்வளவு நேரம் செலவிடுகிறோம் என்பதைக் கணக்கிட்டால், அது ஒரு ருசிகரமான தகவலைத் தரும். நமக்கு உடலின் வெளிப்புறத்தை தூய்மையாக வைத்துக் கொள்ள நிரம்ப நேரம் தேவைப்படுகிறது. நமது தோற்றம், நிறம், சருமத்தின் மீது கவனம், சருமத்தின் மீது வளரும் முடி, என்று எத்தனையோ நம் கவனத்தைக் கவருகின்றன. (வாசனா திரவியங்கள் விற்பவருக்கு இவை நன்மை பயக்கும்.) அதன் பின் ருசி பார்க்கும்பொழுது நிரம்ப நேரம் செலவிடுகிறோம். விரும்பிய உணவைத் தேடுகிறோம். ஹோட்டல்களில் உண்கிறோம். நொறுக்குத் தீனிகளை நாடுகிறோம். உடலுக்கும் மனத்திற்கும் மகிழ்வைத் தேட பல வழிகளில் முனைகிறோம். நம்மில் பெரும்பாலோர் இந்த உடலையும் புலன்களால் எழும் உணர்வுகளை திருப்திப்படுத்த எத்தனையோ வழிகளில் முனைகிறோம். நம்மிடமிருந்து நம் உடல் வேறு, நாம் வேறு என்று வேறுபடுத்தி உணர்வதில்லையே. மிகவும் அரிதாகவே அப்படி உணர்கிறோம்... ஆகவே நம் உடலை ஒரு வலி வந்து தக்கும்பொழுது உங்கள் மனத்தையும் புலன்களையும் அது வெகுவாகத் தாக்குகிறது. ஏனென்றால் உங்கள் உடலுக்கு மட்டுமே மிக அதிக கவனம் செலுத்தி

வந்திருக்கிறீர்கள் அல்லவா? உங்கள் புலன்கள் திருப்திப் படாத பொழுது, உங்களுக்கு கோபம் வருகிறது. உங்கள் மனம் கட்டுப்பாடு அற்றுப் போகிறது. (உதாரணம்: ஒரு சில நாட்களுக்கு ருசியான உணவு இல்லாவிட்டால், உங்களுக்கு மனைவி மீதோ அல்லது உணவு தயாரிப்பவர் மீதோ கோபம் வருகிறது.) ஒரு சிலருக்கு தங்கள் மீதே அவ்வளவு நம்பிக்கை கிடையாது; ஏனென்றால் தோற்றத்தில் அவ்வளவு எடுப்பாகத் தோன்ற மாட்டார்கள். இதற்கு யார் பொறுப்பு? அவர்கள்தானே அதற்குப் பொறுப்பு.... அறிவு அல்லது ஞானம் என்பதே உயர்ந்தது. நமது மனம் அதை நாடியே எப்பொழுதும் சிந்தித்திருக்க வேண்டும். அதன் பிறகு நமது உடலும் அதன் புலன்களும் அதற்குப் பிறகே முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். அப்படி இருந்தால், நாம் கட்டுப்பாடு உடையவர்க்ள் ஆவோம்."

'பரமாத்மாவானவர் ஒவ்வொரு மனிதனிடமும் குடிகொண்டிருக்கிறார்." என்றார் பகவான் கிருஷ்ணர். சிறியதோ, பெரியதோ எல்லா உருவத்திலும் அவர் குடிகொண்டிருக்கிறார். அவர் எப்பொழுதும் பிரிவுபடாத நிலையில் இருக்கிறார். இருந்தும் பிரிவுபட்ட நிலையிலும் இருக்கிறார். அசையாத நிலையிலும் இருக்கிறார். அசையும் நிலையிலும் இருக்கிறார். அவரே ஒளியாகவும் இருக்கிறார். இருளாகவும் இருக்கிறார். இவற்றை எல்லாம் புரிந்துகொள்வதே ஞானம். இயற்கையிடமே எல்லா பொருட்களும் மண்டிக் கிடக்கின்றன. அதுவே எதற்கும் காரணப் பொருளாகும், அதாவது உயிருள்ள ஒரு பொருளாகும். அந்தப் பொருளுக்கு ஆசை, சுயச் செருக்கு, நெருக்கம், அவை உபயோகப்படுத்தும் புலன்களின் உதவியால் செயல்பாடுகளை உருவாக்குகின்றன. அவை நல்லது கெட்டது என்றும், மகிழ்ச்சி/வலி என்றும் தோற்று விக்கின்றன. நானே எல்லாவற்றையும் சாட்சியாக நின்று கணித்துக் கொண்டிருக்கிறேன். நானே எதையும் அனுமதிக்கிறேன்; மகிழ்ச்சியையும் அனுபவிக்கிறேன். மற்றும் எதையும் அனுபவிக்காமலும் இருக்கிறேன். என் கடமையைச் செய்து கொண்டே தொடர்கிரேன் ....... எதன் மீதும் எந்தவிதப் பற்றுதலும் இல்லாமல் தொடர்கிறேன்.

எவர் ஒருவர் இதைப் புரிந்து கொள்கிறாரோ, புரிந்து கொண்டு செயல்படுகிறாரோ, அவர் மீண்டும் பிறப்பதில்லை. அவர் மேற்கொண்டு பிறப்புக்கள் அற்றவராகப் போய் விடுகிறார். அவர் பரமாத்மாவின் தரிசனத்தைப் பெறுகிறார். தன் ஆத்மாவை அழித்துக் கொள்வதில்லை. இதனால் அவர் கடவுளையே அடைகிறார். எவன் ஒருவன் எல்லா ஆசைகளும் இப்படித்தான் அடித்தளத்தில் உருவாகின்றன என்பதைப் புரிந்து கொள்கிறானோ, அவனே மிக உயர்ந்த புனிதத்தன்மையை அடைகிறான். எவன் ஒருவன் இந்த உடலைப் பற்றியும், உடலைப் பற்றிய அறிவையும், இயற்கையைப் பற்றியும் வாழ்வு முறைகள் பற்றியும் அறிய முடிகிறதோ அவனே எந்த ஒரு நிலையையும் கடந்து பரமாத்மாவிடம் சேர முடியும்.

"நமது வாழ்க்கை: "ஏன்?" என்று கேள்விகள் கேட்டே நமது வாழ்க்கையைப் புரிந்து கொள்ள ஆரம்பிக்கிறோம். அந்த கேள்விக்குக் கிடைக்கும் பதில் இருக்கும் தர்க்க வாதத்தைப் புரிந்து கொள்கிறோம். அதன் மூலம் நமது அறிவு பெருகுகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே இந்த உத்தியைத் தான் அனுசரித்து அறிவைப் பெருக்கி

வருகிறோம். ஆகவே பெரும்பாலான சமயங்களில் நமக்கு ஏதோ ஒரு தர்க்க ரீதியான தகவல் வேண்டி இருக்கிறது. அது நாம் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் இருக்க வேண்டும். அது தரும் தகவலை அறிவு என்று கொண்டு, மனத்தில் பதிய வைத்துக் கொள்கிறோம். அதை வைத்துக் கொண்டு வாழத் தொடர்கிறோம். இருந்தாலும், எப்பொழுதுமே நமக்கு அந்த தர்க்க வாதம் தேவைப் படுவதில்லை. அதில் திருப்திப் பட்டு வாழ முனைவதில்லை. எங்கெல்லாம் நேர்மறை அல்லது எதிர்மறை நன்மைகள் நிரம்ப இருக்கின்றனவோ அங்கெல்லாம் இது உண்மையாகிறது. நாம் எடுத்துக் கொண்ட நிலையில், நாம் எதையும் தர்க்க வாதம் இல்லாமல் ஒப்புக் கொள்கிறோம். தெருவில் நடந்து சென்று கொண்டிருக்கும்பொழுது யாரோ ஒருவர், "அடுத்த தெருவில் எரிமலை வெடித்து சிதறிய நெருப்புக் குழம்பு தெளித்து ஓடுகிறது" என்று சொன்னால், - பலர் காயமுற்று விட்டனர் என்று சொன்னால், அங்கு நாம் செல்லக் கூட மாட்டோம். அப்படி ஒரு சாத்தியக்கூறு இருக்க முடியாது என்று நமக்குத் தெரிந்தும் நாம் அங்கு செல்ல மாட்டோம். யாரோ ஒருவர், கடவுளின் விக்கிரகம் பாலைக் குடிக்கிறது என்று சொன்னதும் நாமும் கையில் ஒரு டம்ளர் பாலை எடுத்துக் கொண்டு செல்கிறோம். யாரோ ஒருவருடைய வாயிலிருந்து கடவுள் விக்கிரகம் ஒன்றை வெளியில் எடுத்து விட்டால், அதை நாம் கடவுளின் அனுக்கிரகம் என்று உணர்கிறோம். இந்த இயல்பே நம் மனத்தை இயக்கிக் கொண்டிருக்கிறது. நமது புலன்களையும் கட்டுப்படுத்திக் கொண்டு இருக்கிறது. யாராவது, 'ஒரு குரங்கைப் பற்றிய சிந்தனையே வேண்டாம் உங்களுக்கு" என்று சொன்ன்வுடன் நீங்கள் குரங்கைப் பற்றியே நினைக்கிறீர்கள். ஏனென்றால் அது ஏன் என்று அறிந்து கொள்ளவே விரும்புகிறோம். ஒருவேளை, 'ஒரு குரங்கைப் பற்றி நீங்கள் நினைத்தால், உடனே இறந்து விடுவீர்கள்" என்று யாராவது சொன்னால், உடனுக்குடன் நீங்கள் அதையே நினைப்பீர்கள். ஏனென்றால் ஒரு பயம் உங்களை ஆட்கொள்ளுகிறது. ஏதோ ஒரு மாற்றம் நிகழுமோ என்ற பயமே தீமை நேருமோ என்ற பெரும் பயத்தை உருவாக்குகிறது. நமக்கு ஏன் அந்த பயம் வருகிறது? ஏனென்றால் இன்றைக்கு இருக்கும் நிலையில் நாம் சுகமாக உணர்வுகளுக்கு உறுதுணையாகவே இருக்கிறோம். அதிலிருந்து நாம் நிச்சயம் மாற விரும்பவில்லை. இருந்தாலும் நமக்கு உடல், உறவு என்று பலவற்றோடு கொண்டுள்ள உறவுகளிலிருந்து விலக விரும்பவில்லை. ஆகவே மாற்றங்களை நாம் விரும்பவில்லை. ஆகவே பயம் ஆட்கொள்கிறது. எப்பொழுது பயம் பற்றிக் கொள்கிறதோ அப்பொழுது தர்க்க வாதம் தேவைப் படாது. நமது அறிவு தோல்வி பெறுகிறது. ... அந்த ஒரு நிலையில், நாம் நோய்வாய்ப்படலாம், மூட நம்பிக்கையைக் கொள்ளலாம், சமநிலையிலிருந்து பிறழ ஆரம்பிக்கலாம். ஆகவே "ஏன்?" என்ற கேள்வியைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். அதை உபயோகிக்காவிட்டால், அதைப் பற்றி நாம் கவலை கொள்ள வேண்டும். அதே சமயத்தில், தர்க்க வாதத்தைப் பற்றி சற்றுக் கூட நாம் கவலைப் படுவதில்லை. (அதை நாம் புரிந்து கொள்ள முடியும்). அதையே நாம் அறிவாக சேமித்து வைத்துக் கொள்கிறோம். (நெருப்பு சுடும்! அதை நாம் சோதித்துப் பார்ப்பதில்லை. இந்த தகவலை அறிவாகவே எடுத்துக் கொள்கிறோம்). .... ஆகவே அறிவு என்பது நமது உடலைப் பற்ரியோ, நம்முடைய ஒட்டுதல்களைப் பற்றியோ ஏன் எதைப் பற்றியும் முழுமையாக இருத்தல் வேண்டும். அப்படி நம்மிடம் உணர்வுகள் இல்லாவிட்டால், (பயம், சந்தோஷம், முதலிய உணர்வுகள்) போன்ற உணர்வுகள் நம்மை கட்டுப்படுத்த ஆரம்பித்து கஷ்டங்களைக் கொண்டு வரும்.

கடவுளும் சரி, அவருடைய படைப்புக்களும் சரி, எல்லாமே ஒன்றுக்கொன்று முரண்பட்டவை. . . . அவரை நாம் புரிந்து கொள்ளாவிட்டால், நமது கொள்கையும் அப்படித்தான் இருக்கும். ஒரு மிகத் மெல்லிய துணுவாக இருக்கும் அணுவானது நம் தேசத்தையே அழித்து விடும். வெகு சிறு அளவு காற்றே எந்த ஒரு அமைப்பையும்

அழிக்க வல்லது. மிக மிக சிறிய அணுவைப் போன்ற ஒரு செல் நம் உடலையே தோற்றுவிக்க வல்லது. அப்படியே சொல்லிக் கொண்டு போகலாம். அப்படிப் பார்த்தால், வானம் எப்படி திறந்த வெளியாக இருக்கிறது? வெகு தூரத்திலிருந்து எப்படி பார்க்க முடிகிறது? ஆனால் அதை நெருங்கப் பார்த்தால், முடிவதில்லை. மேலும் தள்ளிப் போய் தூரத்தில் போய் விடுகிறது. அதற்கு முடிவே இல்லை. அப்படித்தான் கடவுளும். அவருக்கு ஒரு ஆரம்பம் என்று கிடையாது. முடிவும் என்று கிடையாது. அவரே மிக மிக சிறிய அணுவைப் போன்றவர். ஆனால் மிக மிக பெருமை படைத்த உயர்ந்தவர். அவரிடமே எல்லா இரகசியங்களையும் இருக்கச் செய்து கொண்டு விட்டார். அவற்றின் அறிவை எல்லாம் நம் மனத்தில் புதைத்து விட்டார். பிரபஞ்சத்திலும் பரவி இருக்கச் செய்து விட்டார். அதே போல், நீரைப் போல, நீங்கள் விரும்பும் உருவத்தில் தம்மை வைத்துக் கொள்கிறார். ஆகவே நாம் எந்த கோணத்தில் பார்க்க விரும்புகிறோமோ அதே கோணத்தில் அவரை நாம் பார்க்கலாம். அவரை ஒரு மலராகப் பாருங்கள்; உடனே அவர் மலராகவே உங்களை நெருங்கி வந்து பார்ப்பார். அவரை ஒரு கத்தியாக மனத்தில் வரியுங்கள். அவர் ஒரு க்த்தியாகி உங்களை நோக்கி வருவார். ஆகவே எல்லாமே உங்களைப் பொறுத்திருக்கிறது. (நாம் என்று நான் சொல்லும்பொழுது, அது அவரையும் சேர்த்துச் சொல்வதாகும். அவரில்லாமல், நீங்க்ளும் இல்லை, நானும் இல்லை, நாமும் இல்லை.)"

# அத்தியாயம் 14 :  மூன்று குணங்கள் கொண்ட யோகம்

பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனைப் பார்த்துச் சொன்னது.  அவரே உயிருள்ள எல்லா ஜீவன்களுக்கும் தந்தை, உயிருள்ள பிராணிகள் அனைத்தின் உடல் அமைப்பையும் தன்னிடத்தே கொண்டிருக்கிறார். எல்லா உயிரினங்களும் பிறக்கும்பொழுதே, மூன்று குணங்களோடுதான் பிறக்கிறார்கள்.  அவையாவன- சத்வ குணம், ரஜோ குணம் மற்றும் தமோ குணம் என்பனவாகும்.  சத்வம் என்பது நற்குணத்தைக் குறிக்கிறது, ரஜோ குணம் என்பது பெரும் ஆவல்கள் அல்லது ஆசைகளைக் குறிக்கிறது மற்றும் தமோ குணம் என்பது அறிவில்லாமையைக் குறிக்கிறது.  நற்குணங்கள் அறிவு, ஞானம் மற்றும் ஒளி பெறுதல் இவற்றைக் குறிக்கிறது. ரஜோ குணம் என்பது ஆசை, மகிழ்ச்சி, வலி, நெருக்கம், போன்றவற்றையும், அறிவின்மை இருள், கொடுமை பைத்தியக்காரத் தனம் இவற்றைக் குறிக்கிறது.  ஒருவரிடம் இருக்கும் நற்குணம் ஆசைகளையும் அறிவீனத்தையும் வெல்லத் தக்கது.  அதே போல் அறிவின்மையும் கூட நல்ல குணத்தையும் ஆசைகளையும் வெல்லத் தக்கது.  இவை எல்லாமே ஒருவருடைய வாழ்க்கைக் காலத்திலேயே நடக்கக் கூடியவை.  எந்த தருணத்திலும் இவை நடக்கலாம். ஒருவர் இறக்கும்பொழுது, ஒருவரிடம் நற்குணமே படிந்து நின்றால், அவர் சுவர்க்கத்தையே அடைவார்.  மீண்டும் பிறக்கும்பொழுது நற்குணங்கள் மிக்கவர்களில் ஒருவராகவே பிறக்கிறார்.  ஒருவர் ஆசைகள் மிக்கவராக இருந்தால், பேராசை மிக்கவர்களிடையே ஒருவராகப் பிறக்கிறார். அறிவீனத்தையே கொண்டிருந்தால், அவர் நரகத்தையே அடைகிறார்.  அதே குணமுடையவர்களிடையே மீண்டும் பிறக்கிறார் அல்லது ஒரு மிருகமாக;ப் ;பிறக்கிறார்.  இவை எல்லாவற்றையும் அறிய முடிந்தவரே வாழும் உயிரினங்களை வாழ வைக்கிறார் மற்றும் அந்த கடவுளே எல்லாவித மயக்கங்களையும் உருவாக்குகிறார் என்பதை அறிந்து கொண்டதும், அவற்றிலிருந்து தூர நிற்கிறார். எந்தவித செயல்பாடுகளோடும் மற்றும் அதன் முடிவுகளோடும்  அவர் தன்னை இணைத்துக் கொள்ளாமல், தனித்து நிற்கிறார்.  மகிழ்ச்சியையோ அல்லது சோகத்தையோ அல்லது வெறுக்க மாட்டார்.  அவருக்கு இரண்டும் ஒன்ரே.  இவரே பரமாத்மாவை அடைகிறார்.

"நமது வாழ்க்கை:  நமக்கு முன் சில நிலைகளைக் கற்பித்துக் கொள்வோம். எப்பொழுதாவது நாம் எவருக்காவது உதவி செய்திருக்கிறோமா? என்று கேட்டுக் கொள்வோம்.  எப்பொழுதாவது நாம் மிகவும் மகிழ்ச்சியாக இருந்து கொண்டு, காலம் இத்துடன் நின்று போய் நான் ஏன் இப்பொழுதே இறந்து விடக் கூடாது? என்று நினைத்ததுண்டா?  எப்பொழுதாவது நாம் ஏமாற்றப்பட்டு விட்டோம் என்றும், வஞ்சிக்கப்பட்டு விட்டோம் என்றும், யாரோ ஒருவரைப் பற்றி தூஷணையாகப் பேசிக் கொண்டு இருந்தோமா?  உண்மையில் சொல்லப் போனால் இவற்றிற்கு எல்லாம் பதில், நம்மில் பெரும்பாலோரிடமிருந்து, 'ஆம்' என்றுதான் வரும்.  அதற்கு என்ன அர்த்தம்?  அதாவது நாம் நற்குணங்கள், ஆசைகள் மற்றும் அறிவீனம் போன்ற குணங்களுக்கு இடையேதான் பயணித்து க் கொண்டு வருகிறோம் என்பதே அர்த்தம். நாம் பிறருக்கு சேவை செய்யும்பொழுதோ  மற்றும் அந்த உதவி அவருடைய நிலைமையை மேம்படுத்தி இருக்கிறது என்று கண்டால், அதைக் கண்டு நீங்கள் மகிழ்வது நற்குணத்தின் ஒரு அங்கமே.  ஒருவேளை ஆசைகள் என்ற அங்கத்திற்குள் நாம் சென்று கொண்டிருப்போம்.  அதை ;மட்டுமே நம்மால் செய்ய முடியும் என்று கருதினால், நாம் அறிவற்றவர்கள் என்று அர்த்தம்.  வெறும் செயல் ஒன்றில்

ஈடுபடும்பொழுது இந்த மூன்று குணங்களுமே நம்மை ஆட்கொள்ளக் கூடியவை. நம்மில் பெரும்பாலோர் ஆசைகளால் உந்தப் பட்டே வாழ்கிறோம். ஏனென்றால் நம் செயல்களுக்கு எல்லாம் பின் இந்த ஆசையே இருக்கிறது. நம்மை மகிழ்ச்சிக்கு உட்படுத்துகிறது. ஒரு சாதனையைச் செய்து விட்ட சந்தோஷத்தைக் கொடுக்கிறது. அதே சமயத்தில் நாம் உணர்ச்சி வசப்பட்டு, மிகவும் உணர்ச்சிகளால் தாக்கமடைந்து விட்டோமானால், கஷ்டத்தையே தருவித்துக் கொண்டு விடுகிறோம். ஒரு சராசரி இந்தியனின் வஅழ்க்கையில், அரசியல் பேசுவது, கிரிக்கட் ஆடுவது (விளையாட்டு), திரைப்படம் பார்ப்பது, நடிகர்களைப் பார்ப்பது, பங்குச் சந்தையில் ஈடுபடுவது மற்றும் நிலம் வகையறாக்களில் வாங்குதல், விற்றலை மேற்கொள்வது, ஆன்மிகத்தில் புதிய வழிகளை நாடுவது (தியானத்துடன்) அல்லது ஆரோக்கியத்துடன் இருப்பதை நாடுகிறோம். - ஒரு சில ஆண்களுக்கும் பெண்களுக்கும் இது ஒரு நாகரிக விரிவாக இருக்கிறது. மற்றும் உண்ணுதலும், பயணித்தலையும் அவர்கள் மேற்கொள்ளுகிறார்கள். இவை எல்லாமே நமக்கு ஆசைகள், நாம் பேசுகிறோம் மற்றும் பார்க்கிறோம். இவற்றைப் பற்றி எல்லாம் படிக்கிறோம். நமது கணிக்கும் சுபாவத்தையும் அறிவையும் திருப்திப்படுத்திக் கொள்கிறோம். இவை எல்லாம் ஆசையின் மாறுபாடுகளே. ஆத்ம விசாரணையில் ஈடுபடுவதை விட்டு விட்டு, அதை உதறி விடுகிறோம். ஒரு மணி நேரத்திற்கு நம்மால் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. டி.வி.யோ, மொபைல் டெலிபோனோ, ரேடியோவோ அல்லது சுற்றத்தில் நண்பர்களோ இல்லாமல் நம்மால் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. நமக்கு நம்மை திருப்திப் படுத்த ஏதோ ஒன்று அல்லது ஏதோ ஒருவர் அவசியம் சுற்றத்தில் வேண்டும். இங்குதான் ஆசைகள் நம்மை உந்த வைக்கின்றன. நம் செயல்களை யாராவது புகழ்ந்தால், நாம் சந்தோஷமடைவது இல்லையா? ஆமாம். நம்மில் பெரும்பாலோர் அதை இரசிக்கிறோம். யாரோ ஒருவர் ஒரு பரிசுப் பெட்டியை அழகாக பரிசை உள்ளே வைத்து உங்களிடம் கொண்டு வந்து கொடுத்தால், அதை திறந்து என்ன இருக்கிறது என்று பார்க்க நாம் யாவரும் ஆசைப்படுவது இல்லையா? உடனே நம்மில் சிலர் அந்தப் பரிசின் மதிப்பு எவ்வளவு இருக்கும் என்று மதிப்பிட ஆரம்பிகிக்கிறோம். சம்பந்தப்பட்டவருக்கு நாம் எவ்வளவு மதிப்பிற்க்கு பரிசு கொடுத்தோம் அத்துடன் அதை ஒப்பிட்டு நோக்குகிறோம்.

ஒரு சில சமயங்களில் நாம் சந்தோஷப்படுகிறோம் - அதாவது நாம் சொல்வதைக் கேளாதவனுக்கு தண்டனை கிடைக்கும்பொழுது மிகவும் சந்தோஷப்படுகிறோம். அல்லது அவனுக்கு பிரச்னைகள் சூழும்பொழுது அப்படி சந்தோஷப்படுகிறோம். அவனைப் பார்த்துச் சொல்லப் பிரியப்படுவது - 'உனக்கு அப்பொழுதே சொன்னேன் பார்த்தாயா?' என்றெல்லாம் சொல்ல நினைக்கிறோம். சில சமயங்களில் கடவுளிடம் சென்று மிகவும் பிரார்த்தனை செய்து கொள்கிறோம் - மற்றவனுக்கு கடும் தண்டனை கிடைக்க வேண்டுகிறோம். ஒரு சில சமயங்களில், 'உனக்கு நான் சரியான பாடம் கற்பிக்கிறேன் பார்! ' என்று சவால்கூட விடுகிறோம். ... அதைச் செய்ய நாம் யார்? நாம் என்ன செய்கிறோம் என்பதை உணர்கிறோமா? நாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம் என்பதை உணர்ந்து செய்கிறோமா? நல்லதும் கெட்டதும் அவரவர் செய்கையால் அவர்களுக்குக் கிடைப்பது. ஒருவருக்கு அவசியம் கிட்ட வேண்டியது கிட்டியே தீரும். வெறும் காழ்ப்புணர்ச்சியைக் காட்டி, நம் மனத்தில் அறியாமையையும் இருளையும் பரவ விடக் கூடாது. ஆமாம் .. அதைக் கொஞ்சம் பழக்கிக் கொள்வது கடினம்தான். இருந்தாலும் பிறருக்கு பாடங்களைச் சொல்லிக் கொள்வதிலும், அல்லது கடவுளை நமக்காகச் சென்று செயல்களில் ஈடுபடச்

சொல்வதும், நமது மனத்திற்கு நல்லது. .. ஒன்று மாத்திரம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இந்த இடங்களில் எவருக்கும் விதிகளுக்குப் புறம்பாகச் செல்ல முடியாது... யாரோ ஒருவர் வாழ்க்கையை நன்கு அனுபவிக்கிறார்கள் என்று கற்பனை செய்வதும், - அப்படி நினைப்பதற்கு அவர்களுக்கு தகுதி இல்லாமல் இருக்கலாம் - அவர்களுடைய வாழ்க்கை முழுக்க இன்னல்கள் உடையதாகவே இருப்பதும் அவர்கள் அறியாமையிலேயே இருக்கிறார்கள் என்பதையும் நம்புங்கள். இதைவிட வேறு என்ன வேண்டும்? இதைவிட வாழ்க்கை வேறு எந்த வித்த்தில் நன்றாக இருக்க முடியும்?

# அத்தியாயம் 15 : பரமாத்ம சொரூபத்தின் யோகம்

வேதங்கள் யாவும் ஆலமரத்தைப் பற்றிச் சொல்கின்றன என்று பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு எடுத்துச் சொன்னார். அது தலை கீழாக வளர்கிறது. வேர்கள் வானத்தை நோக்கி வளர்கின்றன. கிளைகள் பூமியை நோக்கி, நீள்கின்றன. வேர்களின் மேல் பாகமே வேதங்கள் ஆகும். கிளைகளில் அந்த மூன்று குணங்களைப் பார்க்கலாம். கீழே செல்லும் வேர்கள் மனித சமூகத்தை அடைகின்றன. அதன் ஆரம்பத்தையும் சரி, முடிவையும் சரி, மக்கள் அறிவதே இல்லை. ஆனால் இந்த மரக்கிளைகளை வெட்ட வேண்டும் என்பதை அறியவே வேண்டும். அதற்காக உபயோகிக்கும் ஆயுதம், 'விருப்பு வெறுப்பு அற்ற தன்மை' ஆகும். அதைக் கொண்டே கடவுளை அடைய முடியும். பகவான் கிருஷ்ணர் மேலும் சொன்னது - " இந்த உலகத்தில் வாழும் உயிரினங்கள் எல்லாமே என் அங்கங்களே. புலன்களோடும், புலனறிவோடும் குணங்களோடும் அவர்கள் ஒரு தத்துவத்தின் பெயரில் வாழ்கிறார்கள். இந்த புதிய உடலுடன், தனிப்பட்ட ஒருவருக்கு வகை வகையான காதுகள், கண், நாக்கு, மூக்கு மற்றும் புலன்கள் என்று அடைகிறார். புதிய புலன்களின் அறிவைக் கொண்டு, உடல் மீண்டும் மீண்டும் செயல்களில் ஈடுபடுகிறது. எவரும் தன்னுடைய வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்வதில்லை. தன்னுடைய குணங்களைப் பற்றியும் அறிந்து கொள்வதில்லை. அத்துடன் தன் ஆன்மாவைப் பற்றியும் அறிந்து கொள்வதில்லை அது எப்படி புதிய உடலுக்குள் புகுந்து கொள்ளும் என்பதையும் அறிந்து கொள்வதில்லை. இருந்தாலும், தன் ஆத்மாவைப் பற்றிப் புரிந்து கொண்டவன் இதை தெளிவாக உணரலாம். சூரியனின் ஒளியோ, நிலவொளியோ அல்லது நெருப்பின் ஜுவாலையோ என் மீதுதான் விழுகின்றன. நான் ஒவ்வொரு கிரகத்திற்குள்ளும் பிரவேசிக்கிறேன். அவற்றை எல்லாம் முறையான வட்டங்களில் சுற்ற வைக்கிறேன். நானே உணவை ஜீரணிக்கும் நெருப்பாவேன். வாழ்க்கையின் காற்றே நான்தான். நானே தாவரங்களை அவற்றிற்குக் கிடைக்கும் உணவுப் பொருட்களைக் கொண்டு வலுவாக வளர வைக்கிறேன். நான் ஒவ்வொருவருடைய இதயத்திலும் குடிகொண்டிருக்கிறேன். என்னிடமிருந்துதான் நினைவுகளோ, மறதியோ அல்லது எதுவுமே வருகிறது. நான் எல்லா வேதங்களின் மூலமும் அறியப்படுகிறேன். நானே எல்லா வேதங்களையும் அறிந்தவனாகிறேன். அழியக் கூடிய பொருட்களைக் கொண்ட இந்த உலகமோ அல்லது அழியாத ஆன்மிக உலகமோ எல்லாமே என்னிடத்திலிருந்துதான் வருகின்றன. நானே பரப்பிரும்மம் ஆவேன். நானே பரமாத்மா எனப்படுபவன். நானே எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவன். இதை அறிந்தவனும் என்னுள் வசி9ப்பவனுக்குமே இனி பிறப்பு என்பது கிடையாது.

"நமது வாழ்க்கை: நான் இதைப் படிக்கும்பொழுது, ஒரு புதிய உடல், புதிய காதுகளுடனும்,கண், நாக்கு, மேலும் புதிய ஆன்மிகக் கொள்கைகள் - முன்ஜன்ம வாழ்க்கையைப் பொறுத்து அமைந்தவை - பிறக்கக் காண்கிறேன். இதில் இருக்கும் பேருண்மை என்னவென்றால், அவை இரண்டிற்கும் சம்பந்தமே இல்லை. 500+ கோடி ஜனங்கள் ஒவ்வொருவருடைய கை ரேகைகளும் வித்தியாசமாக இருக்கின்றன. இதற்கு முந்தைய 400 கோடி ஜனங்களுடைய கை ரேகைகளும் ஒவ்வொன்றும் வித்தியாசமாக இருந்தன. இதேதான் உண்மை - அதற்கு முந்தைய சந்ததிகளுக்கும் இதுவே உண்மை. இது ஒரு பேராச்சரியமான தனித்தன்மையான அடையாளமாக ஒவ்வொரு தனிமனிதனுக்கும் இருக்கிறது. இதுவே கண் விழிகளுக்கும் பொருந்தும்.

அவை ஏன் ஒன்றாகவே இருக்கக் கூடாது. குறைந்த பட்சம் உதாரணத்திற்கு சிலர் என்று கைக்கு வந்தவாறு தேர்ந்தெடுத்துப் பார்க்கும்பொழுது! அவை ஏன் ஒன்றாக இருப்பதில்லை? இப்படி தனிப்பட்ட வடிவமைப்பு எப்படி சாத்தியமாக ஆயிற்று? வெறும் கண்களுடன் அவை எல்லாமே பார்ப்பதற்கு ஒன்றாகவே தோன்றுகின்றன. 1.5 அங்குலத்திற்குள் - கட்டைவிரல் அகலம் - காணப்படுகின்றன. அதே போல் இந்த உலகத்தில் 7 நபர்கள் ஒன்றாக இருக்கிறார்கள் என்றும் சொல்கிறோம். இருந்தாலும் இதுவரை நாம் அப்படிப் பார்த்ததில்லை. பிறக்கும் இரட்டைக் குழந்தைகளிடம் கூட வேறுபாடுகள் காணப்படுகின்றன. இதை எல்லம் உருவாக்கியது யார்? அல்லது வடிவமைத்தது யார்? 'கிளோநிங்'கைப் பற்றிக் கவலைப் படாதீர்கள். அதுவும் ஒரே நபரின் செல்களிலிருந்தே உருவாக்கப்படுகிறது.... அது க்ஸீராக்ஸைப் போன்ற வழிமுறை. அதே போலத்தான் டார்வினின் பரிணாமக் கொள்கையைப் பற்றியும் படிக்கிறோம். நான் தனிப்பட்ட வகையில் அதை இரசித்துப் படிக்கிறேன். மற்றும் அதைப் பற்றி சிந்திக்கிறேன். அதில் நான் கண்ட மிக இரசனையான உண்மை என்னவென்றால், அண்டைய உயிரினங்களுக்கு இடையில் இருக்கும் ஒற்றுமையை அது எடுத்துக் காட்டுகிறது. இருந்தாலும், எந்த ஒரு பரமாதமாவான கடவுளின் உதவியில்லாமல் உயிரினங்கள் எல்லாம் பிறந்து விட்டன அல்லது பரிணாமம் நடந்து விட்டது என்று அது சொல்லவில்லை. அப்படி நடக்கவும் முடியாது. இந்த உலகின் பல காலக் கட்டங்களில், கடவுள் வித்தியாசமான உருவங்களை மேற்கொண்டார். வித விதமான மிருகங்களைப் படைத்துக் கொண்டே போனார். ஒரு சில கால கட்டங்களில் மனிதன் கூட வாழ்ந்து வந்திருக்க மாட்டான். . க்டந்த 2000 வருடங்களில், நமது சரித்திரம் தெளிவாக இருக்கிறது. ஆனால் எந்த பரிணாமத்தையும் நாம் பார்க்கவில்லை. ஏதொ ஒரு புதிய மிருகம் உண்டானதாக கேள்விப்படவில்லை. குறைந்த பட்சம் 5000 வருடங்களுக்குக் கேள்விப்படவே இல்லை. இது நிச்சயம். இவை எல்லாம் பரிணாமத்தாலேயே ஏற்பட்டவி. நாம் சற்றே மாறுபட்ட உருவான மனிதனை எதிர்பார்த்திருக்கலாம். ஆனால் நாம் எல்லோருமே ஒரே வகையினராகத் தான் இருக்கிறோம். இவை யாவும் நமக்கு ஒன்றைத்தான் எடுத்துக் காட்டுகின்றன. அதாவது ஒரு பரமாத்மாவானவர், எல்லா உயிரினங்களையும் உருவாக்கி அவை எல்லாவற்றையும் பேணி வருகிறார். இந்த உலகில் வாழும் உயிரினங்கள் எல்லாவற்றின் மீதும் அவருக்கு ஒரு முழுமையான பார்வை இருக்கிறது. அவற்றின் உயிர்கள் மீதும் அவருக்கு முழுமையான பார்வை இருக்கிறது. மீண்டும் மீண்டும் உருவாக்கி மற்றும் அழித்தும் மற்றும் மாற்றை அமைத்தும் செய்து கொண்டே இருக்கிறார். மேலும் புதிய புதிய உயிரினங்கள் பிறந்து கொண்டே இருக்கின்றன. இருந்தாலும், வாழ்க்கையை வாழ்ந்துகொண்டும், ஒருவரோடு ஒருவர் ஒப்பனை செய்து கொண்டும், வேடிக்கைகள் பல செய்து கொண்டும் இருப்பது நமக்கு முக்கியம். நாம் ஒரு பரமாதமாவானவரால் முழுக்க முழுக்க கட்டுப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதைப் பற்றி நமக்கே முழு பிரக்ஞை இல்லை. நாம் மட்டும் அல்ல, இந்த உலகம் முழுவதுமே அப்படித்தான் இருக்கிறது. இதை நாம் செய்வதற்குக் காரணம், அந்த பரமாதமாவானவர் நம்மை விட்டு வெளியே இருக்கிறார் என்று எண்ணி வருவதால்தான். நமது வாழ்க்கையின் நிமித்தம் நாம் மேற்கொண்டு செயல்களைச் செய்து கொண்டே இருக்கிறோம். ஆமாம்... நாம் எல்லா கடமைகளையும் சரி, எந்தவித பற்றுதல்கள் அல்லது ஒட்டுதல் இல்லாமல் செய்து கொண்டு, நம்முள் இருக்கும் அந்த பரமாத்மாவைப் பற்றி நினைத்துக் கொண்டும் வாழ்ந்து வரலாம்.

# அத்தியாயம் 16: புனிதமும், இராட்சஸ குணமும் நிறைந்த யோகம்.

'இயற்கை இருவகைப்படும்" என்று பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனிடம் சொன்னார். ஒன்று புனிதமானது. மற்றொரு இராட்சஸத் தன்மையைக் கொண்டது. தூய்மை, பயமற்ற தன்மை, நிலைத்து ஒரே நிலையில் நிற்றல், ஆத்மாவைப் பற்றித் தெரிந்திருத்தல், ஆடம்பரமே இல்லாத எளிமையான தன்மை, சத்தியம், அஹிம்சை. கோபமே வராத குணம், பக்குவமும் பணிவும், மன்னித்து அருளும் தன்மை, சக்தி, செருக்கு இல்லாமை, போன்றவையே புனித குணங்களாகும். கோபம், அறியாமை, தன்னையே புகழ்ந்து கொள்ளுதல், தூயமையில்லாமை, சத்யத்தோடு ஒழுகாமல் இருத்தல், நல்ல குணங்களோடு இல்லாமல் இருத்தல், அநதந்த கணங்களில் தன் சுய சந்தோஷத்திற்காக எதையும் தியாகம் செய்ய தயாராக இருத்தல், போலியான நம்பிக்கை, புலநின்பங்களில் ஒரு தீவிர பற்றுதல், வெறி மிகுந்த கோபம், சோகப்படுதல், அநீதியான வழியில் செல்வம் சேர்த்தல், அதை வைத்து புலனின்பம் நாடுதல், எதிர்காலத்திற்காக மேலும் மேலும் செல்வம் சேர்த்துக் கொண்டே போதல் (சில விடுபட்டிருக்கின்றன)........ இவை எல்லாம் இராட்சஸ குணங்களைச் சாரும். அத்துடன் இராட்சஸ குணம், சுயச் செருக்கைக் கொண்டு வருகிறது, பேராசையும், அனாவசிய பெருமிதத்தையும், பொய்யான தியாகங்களையும், போலியான நம்பிக்கைகளை வைத்திருத்தல், மற்றும் பழக்கங்களுக்கு அடிமையாதல், புலன்களின் இன்பத்தை நாடுதல், தன்னையே மரியாதை செய்து கொள்ளுதல், வெறியுடன் ஒன்றையே பற்றி நிற்றல், அதிகார துஷ்பிரயோகம் என்பன வெல்லம இராட்சஸ குணங்களைச் சேர்ந்தவை. இந்த குணங்களோடு இருப்பவர்கள் கடவுளையும் நேசிப்பதில்லை. தங்கள் உடல்கள் மூலம் என்னையும் பார்ப்பதில்லை அல்லது பிறர் உடல்களின் மூலமும் என்னைப் பார்ப்பதில்லை. இவ்வகையில் தீங்கே அல்து தீமைகளையே செய்து கொண்டிருப்பவர்கள் எல்லாம் இராட்சஸர்களுக்கு நடுவில்தான் பிறக்கிறார்கள். அவர்களுடைய செயல்களினால், இந்த இராட்சஸ குணமுடையவர்களால் என்னை அடையவே முடிவதில்லை. பேராசை, கோபம் மற்றும் அதிகமான பாலியல் ஆசைகள் எல்லாம் தவிர்க்கப் பட வேண்டியவை. அப்பொழுதுதான் அந்த இராட்சஸ குணங்களிலிருந்து விடுபட முடியும். இந்த இருள்நிறைந்த நிலையிலிருந்து வெளியே வருபவர்கள் தமக்கும் சரி, பிறருக்கும் சரி, நல்லவற்றையே செய்து கொள்ள முடியும். இவற்றை எல்லாம் தவிர்க்கக்கூடியவர்கள் இருளில் எதையும் செய்ய முடியாது. எப்பொழுதும் எதிலும் ஒரு முழுமையை அடைய முடியாது. சந்தோஷத்தையும் அடைய முடியாது. அத்துடன் பரம உயரத்தில் இருக்கும் ஆன்மிக இலக்கையும் அடைய முடியாது.

" நமது வாழ்க்கை: நாம் சற்று எண்ணிப்பார்ப்போம். மூன்றே மூன்று செயல்பாடுகளில் நம்மைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்ளும் வகையில் சற்றே எண்ணிப் பார்ப்போம் ... வேண்டுமானால் 1 லிருந்து 60 வரை எண்ணுவோம். .. அவற்றில் ஒன்றைப் பற்றிக் கூட நாம் பெருமை கொண்டு வாழ்ந்தொஓமானால், நாம் இன்னமும் கீதையைப் புரிந்து கொள்ளவில்லை என்று அர்த்தம். நம்மைப் பற்றிப் பெருமைப் பட்டுக் கொள்ள நமக்கு ஒன்றும் இல்லை. எல்லாமே அந்த பரமாதமாவிடமிருந்து வந்து கொண்டிருக்கிறது. அல்லது நாம் எல்லோரும் அவ்வளவு நல்லவர்கள் அல்ல என்று எண்ணவே தேவையில்லை. புனித குணங்களின் சேர்ப்போ

அல்லது இராட்சஸ குணங்களோ தனிப்பட்ட முறையில் ஒரே மனிதரிடம் குவிந்து கிடப்பது அல்ல. அவை ஒரு கலவையாக இருக்கலாம். ஒருவர் சமூகத்தில் வகிக்கும் நிலை, பணம், அதிகாரம், போன்றவை எல்லாம் வெகு சுலபமாக, பேராசை, துஷ்பிரயோகம், மற்றும் வீண் பெருமை இவற்றைத் தானே கொண்டு வந்திருக்கின்றன. இந்த குணங்களுக்கு மனிதர்கள் இரையாகி விடுகிறார்கள். ஒரு வாயிற் காப்பாளர் தன்னுடைய சிறிய அதிகார நிலையிலேயே பெரும் கர்வம் மற்றும் அகந்தையைக் காட்டலாம். ஒரு அதிகாரிக்கு இது வரும். ஒரு அரசியல்வாதி அப்படி நடந்து கொள்வார். நமக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்களை நாம் நம்மை அறியாமலேயே துஷ்பிரயோகம் செய்து கொண்டிருக்கலாம். நமக்கு திருப்தியைக் கொண்டு வருவதற்காக அப்படிச் செய்து கொண்டிருக்கலாம். அவற்றை எல்லாம் முழுமையாக நம்மிடமிருந்து ஒதுக்குதல் வேண்டும். நம் ஆன்மிகத் தொடர்பிலிருந்து அவற்றை அகற்றுதல் வேண்டும். அதை ஏன் செய்ய வேண்டும்? ஒரு கோவிலோ அல்லது மசூதியோ தொழுவதற்கு ஏற்ற இடம். அமைதியாக தொழுதல் நடக்க வேண்டிய இடம் அது. எங்கெல்லாம் அந்த இடங்கள், வருவாயைத் தேடும் இடங்களாகி விட்டனவோ ஜனங்கள் அமைதி உணர்வை இழந்து, ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டு, பூஜை புனஸ்காரங்கள் செய்ய முற்படுகின்றனர். (கோவிலுக்குச் செல்வது ஒரு கடமையாகி விட்டது. அங்கு நிறைந்திருக்கும் பரமாத்மாவைப் பற்றி நினைப்பதை விட ஒரு கடமையாகக் கருதி கோவிலுக்குச் செல்கிறோம்.) இவை எல்லாம் புனித காரியங்களா அல்லது இராட்சஸ செயல்களின் மறு உருவங்கலா? நம் எல்லோருக்குமே இதற்கு பதில் தெரியும். .... நாம் செய்து கொண்டிருப்பவற்றை எல்லாம் சோதித்துப் பார்த்தால், நம்மிடம் இராட்சஸ குணங்களும் குடிகொண்டிருப்பதை அறிகிறோம். நிரந்தரமாகவும் முழுப் பிரக்ஞையுடனும் அவற்றை எல்லாம் நாம் வெட்டி அகற்ற வேண்டும். ... எவரெவருடன் எல்லாம் நம் வாழ்க்கையின் பெரும் பகுதியைக் கழித்துக் கொண்டிருக்கிறோம்? என்பதை சற்றே எண்ணிப் பார்ப்போம். ... மனைவியா, தாயாரா , நண்பர்களா அல்லது குழந்தைகளா? ....!!!! இதற்கு பதில் ஒன்று தான் அதாவது இவர்களில் ஒருவரிடமும் கூட நாம் இணைந்து இருந்ததில்லை. ஆனால், நம்முடனேயேதான் என்பதுதான் சரியான பதில். அதாவது மேற்கண்ட இராட்சஸ குணங்கள் யாவும் நம்மிடையே இருந்தால், நமக்கு நாமேதான் முதல் எதிரி என்று புலனாகிறது.

# அத்தியாயம் 17 - மூன்று வழி நம்பிக்கை கொண்ட யோகம்

சத்வ, ரஜஸ் மற்றும் தமோ குணங்கள் மூன்றும் உடையவர்களிடத்தில் எப்படி நம்பிக்கை குடிகொள்கிறது என்று அர்ஜுனன் பகவானிடம் கேட்டான். இந்த மூன்று குணங்கள் கொண்ட நபர்களின் அவரவர்களுடைய வாழும் வாழ்க்கையைப் பொறுத்தே இருக்கிறது. ஒவ்வொரு மனிதரும் அவருடைய நம்பிக்கையைப் பொறுத்தே அவர் உருவாக்கப்படுகிறார். முழுக்க முழுக்க ஒரு கடுமையான விரதத்தின் சிரத்தையோடு இருப்பவர்கள் தங்கள் உடலை வருத்திக் கொள்கிறார்கள். சரியாக உண்பதில்லை. தங்கள் உடலை வருத்திக் கொள்கிறார்கள். அவர்கள் எல்லோருமே நான் அவர்களுக்குள் இருப்பதை அறிய முடியாமல் தவிக்கும் முட்டாள்கள். யாரெல்லாம் பழச் சாறுகள் குடித்துக் கொண்டும், இலை தழைகள் கூடிய உணவை உண்கிறார்களோ அவர்களெல்லோரும் நல்ல பண்புகளைக் கொண்டவர்களாக இருக்கிறார்கள். காரமான உணவு பதார்த்தங்களை உண்பவர்கள், பெரும் வேட்கைகளை உடைத்தவர்களாக இருப்பார்கள். எவரெவர் அழுகிப்போன பதார்த்தங்களையும் ருசியற்ற உணவையும் உண்கிறார்களோ, தூய்மையற்ற பதார்த்தங்களை உண்கிறார்களோ அவர்கள் எல்லோரும் அறிவிலிகளாக இருப்பார்கள். யார் நற்பண்பு உடையவராக இருக்கிறாரோ மற்றும் எந்தவித எதிர்பார்ப்பும் இல்லாமல் பூஜை புனஸ்காரங்கள் செய்து வருகிறாரோ மற்றும் பெரும் வேட்கைகளை உடையவர்கள் எல்லோருமே பூஜை செய்வார்கள் ஆனால் கொஞ்சம் கொஞ்சம் எதிர்பார்ப்புக்களோடும் சில இலக்குகளோடும் செய்வார்கள். உடலுக்கு வேண்டிய விரதங்களின் நன்மைகள் யாவும் கடவுளைப் பிரார்த்திப்பதால் கிடைக்கிறது. தூய்மையான வாழ்க்கை, நேர்மறை குணங்கள் - இவற்றால் அந்த நன்மைகள் யாவும் கிடைக்கின்றன. மற்றும் ஆரோக்கியத்தைக் கெடாமல் பார்த்துக் கொள்வதால் கிடைக்கிறது. நல்ல வாய்மொழியினால் வரும் விரத பூர்வ நன்மைகள் யாவும், ஆரோக்கியமான நன்மைகளைக் கொண்டு வரும். சொற்களாலும் உண்மையையே பேசுவதாலும் கிடைக்கின்றன. அதே போல் மனம் தூயமையடைவதற்கு மனக் கட்டுப்பாட்டினால் கிடைக்கிறது. மன அமைதியாலும், எண்ணங்களில் தூய்மை இவற்றால் கிடைக்கிறது. இவற்றிற்கு அப்பால் ஒரு பரிசை வேண்டி விரதங்கள் இருப்பது என்பது அல்லது ஒரு முடிவை எதிர்பார்த்துச் செய்வது என்பது எல்லாம், அந்த வேட்கையினால் வருவது. நிலையில்லாதது. வெறும் சிற்றாவல்களைத் தணிக்கக் கூடியது. எந்த ஒரு விரதத்தை முட்டாள்தனத்துடன் ஒருவர் செய்து வருகிறார்களோ அதை உதாசீனம் செய்ய வேண்டும். ஒரு தர்மத்தைச் செய்யும்பொழுது எந்தவித முடிவையும் எதிர்பார்க்காமல் செய்ய வேண்டும். மற்றும் அது போய்ச் சேர வேண்டிய மனிதர்கள் உயர்வானவர்களாக இருத்தல் வேண்டும். அப்படி என்றால் அது நற்பண்பாகும். கீழான ஒருவருக்கு அது செய்யப்பட்டால் அது

அறிவில்லாமை. ஒரு வேட்கையை தணிக்க அது செய்யப்பட்டால் அது மரியாதைக்காகச் செய்வது. ஆனால் எவர் ஒருவர் தர்மம் செய்து கொண்டு, விரதத்தை அனுஷிடித்துக் கொண்டு பிறவற்றையும் செய்து கொண்டிருக்கிறாரோ ஆனால் பரமாத்மாவின் மீது நம்பிக்கை வைத்துச் செய்து கொண்டிருக்கிறாரோ அவர் வேறு எந்தவித இலக்கையும் கருதாது செய்கிறாரோ அவரே மூன்று வழிகளையும் அனுசரித்து முன்னேறுவார்.

"நமது வாழ்க்கை: நம் அன்றாட வாழ்க்கையில், டி.வி. பார்க்கிறோம். செய்தித்தாள் படிக்கிறோம். பயணிக்கிறோம். எத்தனையோ விளம்பர போர்டுகளைக் காண்கிறோம். ஆனால் எல்லாவற்றையும் கூர்ந்து கவனிப்பதில்லை. ஒரு இரு சக்கர வண்டியோ அல்லது நான்கு சக்கர வண்டியோ வாங்க நின்2ஐத்தால், எத்தனையோ விளம்பரங்களை அதே செய்தித்தாளில் பார்க்க முடிகிறது. அவற்றையே டீ.வி. சேனல்களில் பார்க்க முடிகிறது. ஷாப்பிங் இடங்களிலும் காண முடிகிறது. அவை எல்லாம் உங்கள் எதிர்பார்ப்புக்களுக்காகவா வெளியிடப்படுகின்றன? இல்லை... அவை அங்குதான் எப்பொழுதும் வருகின்றன. நாம் அவற்றை கண்கொண்டு பார்ப்பதில்லை. தேட ஆரம்பிக்கும்பொழுது நம் கண்களில் அவை படுகின்றன. (இன்றைய கால கட்டங்களில் பிரசுரிப்பவர்கள் யாவ் அரும், 'சூடான' தலைப்புக்களையே நாடிப் பிரசுரிக்கிறார்கள். அதே போலத்தான் நம்பிக்கையையும் நாம் பார்க்கிறோம். ஆகவே நம்பிக்கையுடன் தேடுங்கள். அது கிடைத்து விடும் உடனே. நமக்கு வேண்டுவதே கிடைத்து நாமே கிடைத்த பொருளாகி விடுவோம். வேண்டியது நம்பிக்கை... கடவுள் உங்களுக்குள் இருக்கிறார் என்பதை நம்புங்கள். கடவுளை நாம் ஏன் கண்டுபிடித்து அறிய முற்பட வேண்டும்? ... பரமாத்மாவை அறியவோ அவரை அடையவோ ஒரே வழிதான் இருக்கிறது. நம்பிக்கை என்பதுதான் அது. . காற்றை உள்ளே வாங்கி விட்டு பின் வெளியிடுகிறோம். இந்த முறையை என்றைக்காவது நிறுத்த முடியுமா? இல்லை. நிறுத்தினால் இறந்து விடுவோம். .. காற்று என்ப்து என்ன? அது பரமாதமாவின் ஒரு அங்கம் இல்லையா? எல்லாமே அவரிடமிருந்து வந்தவைதானே. அவர் பூஜை அறைக்குள் மாத்திரம் அல்ல. அல்லது ஒரே இடத்தில் மட்டும் அல்ல. ... அல்லது அலாவுதீன் விளக்கிலிருந்து வந்த பூதம் என்று நினைக்கிறோமா? ... நான் அதைத் தேய்த்தபொழுதெல்லாம் வருவாரா? .. அது போல எத்தனையோ பூஜை புனஸ்காரங்கள் இருக்கத்தான் செய்கின்றன. .. அவற்றில் சில விஞ்ஞான பூர்வமான காரணங்கள் கொண்டவை. அவற்றுடன் சுத்தம் சேர்ந்து அனுஷ்டிக்கப்படுகிறது. அதற்கு அப்பால் ஒன்றுமில்லை. வீட்டில் யாராவது இறந்து விட்டால்ஓ அல்லது ஒரு குழந்தை பிறந்தாலோ அல்லது பெண்கள் யாராவது விட்டிற்கு விலக்கமாகிப் போய் விட்டாலோ, இப்படி ஏதோ ஒன்று நடந்தால், அந்த சம்பவங்களை எல்லாம் சற்றே விலக்கப்பட வேண்டிய நிலைகளில் வைக்கிறோம். .. அவைகளை புண்ணிய நிலைகளிலிருந்து நக்ர்த்தி வைக்கிறோம். .. கடவுள் மயானத்தில் இருந்தால் (உதாரணத்திற்கு

சிவபெருமான்) கடவுள் ஒரு பெண்ணின் உடம்பிலும் இருக்கத்தானே செய்கிறார். அவளுடைய ஆன்மாவிலும் அவர் இருக்கிறார். கடவுள்தானே அந்த அழகான பிறப்பான குழந்தையைப் பெற்றுக் கொடுத்தார். இதற்காக எல்லாம் கடவுளைத் தனியாக வைத்துப் பார்ப்பது தவறு. உங்கள் வீட்டிற்கு ஒரு வருகையாளராக வந்து சாப்பாடு/பிரஸாதம் சாப்பிட வந்துவிட்டுச் செல்பவரா? ... அவரோ பரமாத்மாவானவர். அவரில்லாமல் இந்த உலகத்தில் எதுவும் அசையாது. ஒரு கணம் கூட உயிரோடு இயங்கப் போவதில்லை. அவரே உயிருக்குள் இருக்கும் இரத்தமானவர். அவரே காற்றாகவும் இருக்கிறார். அவரே நீராகவும், அவரே உயிராகவும், அவரே பொருளாகவும் மற்றும் எல்லாமாகவும் இருக்கிறார்... சுத்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். கடவுள் ஒரு கணத்திற்கு எதிலும் இல்லை என்று நினைத்துக் கொள்ளுங்கள். .. ஏதோ ஒரு சடங்கைச் செய்து முடித்து விட்டு கடவுளுக்கே எல்லாவற்றையும் அர்ப்பணிக்கிறோம் அதற்குப் பிறகு கோபமுள்ள ஒரு இளைஞனாகப் பார்க்கிறோம் அல்லது ஒரு கோபமிக்க ஒரு பறவையாகவோ அல்லது கொல்பவராகவோ அல்லது கடன் கொடுப்பவராகவோ அல்லது தியாகம் செய்பவராகவோ அல்லது ஒரு தலைவனாகவோ அல்லது எந்த ஒரு உருவத்திலாவது உருவகப்படுத்திக் கொண்டால், அதே உருவத்தில்தான் அவர் வருவார்.... எவருமே கொடுக்கப்பட்ட நியமங்களை எல்லாம் பரிபூரணமாகத் தெரிந்து கொண்டு செயலாற்றி விடப் போவதில்லை. ஆகவே மனிதர்களின் ஆற்றலைப் பொறுத்துத்தான் பூஜைகள் புனஸ்காரங்கள் எல்லாம் உருவாக்கப்பட்டிருக்கின்றன. காலப் போக்கில் அவை எல்லாம், விதிகளாக மாறி விட்டன. . இருந்தாலும் நீங்கள் அவரை ஒளியாக பாவித்தால், அவர் உங்களுக்கு ஒளியாகத்தான் தெரிவார். அவரை ஒரு துப்பாக்கி என்று கற்பனை செய்து கொண்டால், அவர் ஒரு துப்பாக்கியாகத்தான் தெரிவார். ... அவருக்கு எது ஒன்றின் மீது பற்றுஇ கிடையாது மற்றும் அவர் எவருக்கும் சமமானவரே. ... நமது நம்பிக்கைதான் நம்மை நமக்கு உரிய தகுதிக்கு ஏற்றது போன்ற நிலைக்கு எடுத்துச் செல்கிறது.

# அத்தியாயம் 18 - எதையும் துறப்பதும் கிடைக்கும் மோட்சம் - அது ஒரு யோகம்

'தியாகம் என்றால் என்ன? துறப்பது என்றால் என்ன? சன்னியாசம் என்றால் என்ன? என்றெல்லாம் அர்ஜுனன் பகவான் கிருஷ்ணரைக் கேட்டான். அதாவது ஒரு சன்னியாசியாக வாழ்வது என்றால் என்ன? என்றெல்லாம் பகவான் கிருஷ்ணரைக் கேட்டான். எல்லா நடவடிக்கைகளையும் துறந்து விட்டு (பொருட்களால் வரும் ஆசைகளை விட்டு விட்டு) வாழ்வதே சன்னியாசத்திற்கு வழிகோலுகிறது. விளையும் பயன்களை எல்லாம் தவிர்த்து விடுவதே துறவிக் கோலத்திற்கு வழி கோலுகிறது. எந்த ஒரு சமயத்திலு, பூஜிப்பது, தியாகம், தருமம் இவற்றைக் கைவிடலாகாது. மிகவும் தூய்மையான ஆன்மாக்களைக் கூட மேலும் உயர்ந்த நிலைக்கு அவை இட்டுச் செல்கின்றன. இருந்தாலும் ஒரு ஈர்ப்புடன் அவை செய்யப்பட்டால், அதற்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. முடிவுகள் எதையும் எதிர்பார்க்காமலேயே எதுவும் செய்யப்பட்டாலே, அவை நற்பண்புகளைச் சாரும். விதிக்கப்பட்ட கடமைகள் யாவும் தேர்ந்தெடுத்துச் செய்யப்படுகின்றன. ஒரு ஈர்ப்புடன் அவை எல்லாம் செய்யப்பட்டால், அவை ஆசையின் பால் செய்யப்பட்டதாகிறது. கடமைகளைச் செய்யாமல் விட்டு விட்டால், அறிவற்ற நிலைமையைக் கொண்டு வருகிறது. கடமையே செய்யாமல் ஒருவரும் இருக்க முடியாது. ஆகவே முடிவுகளை என்னிடம் விட்டு விடு. அதுவே சிறந்ததாகும். உடல், கடமையைச் செய்பவர், புலன்கள், எடுத்துக் கொள்ளப்பட்ட கடமைகள் மற்றும் பரமாத்மா எல்லோருமே இணைந்துதான் செய்யப்பட்ட செயல் நடைபெறுகிறது. ஆகவே தானும் சேர்ந்து செயலில் ஈடுபட்டான் என்று எவரும் கருதினால், அவன் அறிவற்றவனாகிறான். நல்ல பண்புகளை உடையவனாக இருந்தால், செய்பவன் பரமாத்மாவையே ஒவ்வொரு ஜீவனிடமும் பார்க்கிறான். செய்யப்பட வேண்டியது எந்தவித பற்றுதலும் இல்லாமல் செய்யப்படுகிறது. அன்போ அல்லது வெறுப்போ இல்லாமலும், செய்பவரின் சுயச் செருக்கு இல்லாமலேயே செய்யப்படுகிறது. மிகுந்த உற்சாகத்துடன் செய்யப்படுகிறது. வெற்றிக்கு முன்னால் எதுவும் தள்ளிபடி செய்யவில்லை அல்லது தோல்விக்கு முன்னாலும் அப்படிச் செய்வதில்லை. வேட்கைகள் மிகுந்து பார்க்கும்பொழுது, மனிதன் பிறரை வெவ்வேறு மனிதர்களாகப் பார்க்கிறான். எல்லா செயல்பாடுகளும் பெரும் முயற்சியால் அந்த வேட்கைகளை திருப்திப் படுத்திக் கொள்ளவே செய்யப்படுகின்றன. காரியங்களைச் செய்பவருக்கு எப்பொழுதும் முடிவுகளைப் பற்றிய கவலைகளே மிகுந்து நிற்கும். பொறாமையும் பேராசையுமே மிகுந்து நிற்கும். அறிவில்லாமல் போகும்பொழுது, புத்தி எதிலும் இருளையே காண்கிறது. செய்யப்படும் காரியங்கள் அனைத்தும் ஒரு மயகத்திலேயும், உதாசீனத்துடனுமே செய்யப்படுகிறது. செய்பவர் ஏமாற்றுகிறார், சோம்பேறியாகவும் பொருட்களை விரும்புபவராகவும் இருக்கிறார்.

நற்பண்புகளுடன் செய்யும்பொழுது, ஒப்புதல் சரியான செயல்பாடுகளுக்கு வழிகோலுகிறது. அந்த தீர்மானமான உள்ளம், முறிக்க முடியாதது மற்றும் தெளிந்த நம்பிக்கையுடன் கூடியது. கடுமையான சந்தோஷமாக ஆரம்பிப்பது தூய்மையானதாக முடிகிறது. வேட்கை நிரம்பிய நேரத்தில் புத்தியும் தீர்மானமும்

எதையும் சரியானது அல்லது தவறானது என்று பிரித்து அறிய முடியவில்லை. தீர்மானம் பெறும் முடிவுகளைப் பொறுத்தவையாக ஆகின்றன. மற்றும் கிடைக்கப் போகும் பொருட்களைப் பொறுத்தும், மத சம்பந்தமானவற்றைப் பற்றியும், புலன்களின் திருப்தியைப் பொறுத்தும் அமைந்து விடுகின்றன. தூயமையுடன்தான் ஆரம்பிக்கின்றன ஆனால் விஷமாக முடிந்து விடுகின்றன. அறிவில்லாமல் போகும்பொழுது தவறானவை எல்லாம், நல்லவையாக எடுத்துக் கொள்ளப்படும். தீர்மானம் எல்லாம் மயக்கத்தின் அடிப்படையில் இருக்கும். கனவு படர்ந்தவையாகவும் புத்திசாலித்தனமில்லாததாகவும் மகிழ்ச்சி என்பது ஆரம்பத்திலிருந்து ஒரு பெரும் தவறான நம்பிக்கையாகவும் போய்விடும். இந்த மூன்று குணங்களுமே எவரின் மீதும் தாக்கம் கொள்கின்றன. அறிவால் தூயமைப்படுத்தப்பட்டும், சுய அடக்கத்தின் பேரிலும் எவர் ஒருவர் கடமைகளைச் செய்கிறாரோ, அல்லது உணவைக் கட்டுப்பாட்டுடன் உண்கிறாரோ, போலியான செருக்கு உணர்வை தவிர்த்து செயல்படுகிறாரோ, அமைதியில் வாழ்ந்து வருகிறாரோ அவரே என்னைப் புரிந்து கொள்ள முடியும். என் உண்மையான சொரூபத்தில் பரமாத்மாவாகப் புரிந்து கொள்ள முடியும். அவரகளே முழுப் பிரக்ஞையுடன் எனக்கு சேவை செய்தும் ஒப்புக் கொள்ளவும் செய்கிறார்கள். எல்லாவித செயல்பாடுகளில் ஈடுபட்டிருந்தாலும், என் பக்தர்கள் என்னை அடைந்து விடுகிறார்கள். என்னைப் பற்றியே எப்பொழுதும் முழு பிரக்ஞையுடன் இருப்பவர், என்னைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பவர், நான் அவருக்கு சென்று எல்லா உதவியையும் செய்வேன். அவர் இந்த வாழ்க்கையைக் கடக்க உதவி செய்வேன். அவரை என்றும் எதையும் இழக்க விட மாட்டேன். பரமாத்மா என்ற முறையில், நான் ஒவ்வொருவரிடமும் இருக்கிறேன். அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் என்னிடம் சரணாகதி அடைந்து விட வேண்டியது ஒன்றுதான். நான் அவர்கள் மீது கருணை செலுத்தி கவனித்துக் கொள்வேன். மிகவும் இரகசியமான புத்திசாலித்தனம் என்னவென்றால், என்னைப் பற்றியே சிந்திக்க வேண்டும். பூஜிக்க வேண்டும். செய்யும் செயல்பாடுகளின் முடிவுகள் எல்லாவற்றையும் என்னிடமே விட்டு விடல் வேண்டும். அப்படிச் செய்வதால் நீங்கள் யாவரும் என்னிடம் தவறாமல் வந்து விடுவீர்கள். உங்களுக்கு நான் உறுதியாகச் சொல்கிறேன். இதை அறிந்தவர்கள் எல்லோருமே பிறருக்கு எல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டும். இதை யார் யார் கேட்கிறார்களோ, நம்பிக்கையுடன் கேட்டு அனுசரிக்கிறார்களோ அவர்களும் எல்லோரும் என்னையே வந்து அடைவார்கள். இதைக் கேட்டவுடன் அர்ஜுனன் பரமாத்மாவிடம் சொன்னது - தான் தன் கடமையை இப்பொழுது உண்ர்ந்ததாகவும் அதைச் செய்ய உடனடியாக தயாராகி விட்டதாகவும் தெரிவித்தான்.

===============

சஞ்சயன் எல்லாவற்றையும் திருதிராஷ்ட்ரருக்கு எடுத்துச் சொன்னான். இந்த வார்த்தைகளே தனக்கு ஒரு நிலையான வகையில் நிற்பதற்கு உதவி செய்வதாகவும் சொல்லி அவற்றை தான் என்றைக்கும் மனத்தில் வைத்திருக்கப் போவதாகச் சொன்னான். அதற்குப் பிறகு அர்ஜுனன் போர்க்கள்த்திற்குச் சென்றான். பாண்டவர்கள் சண்டையில் அமோக வெற்றி அடைந்தார்கள்.

"நமது வாழ்க்கை: ஒரு மனிதன் எந்தவித பலன்களும் இல்லாமல் ஒரு செயல்பாட்டை ஏன் செய்ய வேண்டும் என்று நான் ஆச்சரியப்பட்டதுண்டு. அப்படிப் பேசுவது ஏனோ நன்மை பயக்கலாம், ஆனால் அது வாழ்க்கையில் நடப்பது அல்ல.

மற்றும், வாழ்க்கை என்பது தனிப்பட்ட உயர்வையும், பணம் சம்பாதிப்பதும் மற்றும் குடும்பத்தைக் காப்பாற்றுவதும்தானே! அதுதானே வாழ்க்கையின் முழு அர்த்தமாகும். அவற்றை எல்லாம் ஒதுக்கி விட்டு நான் எப்படி வாழ முடியும். கீதை என்பது பொது ஜனங்களுக்காக ஏற்பட்டது அல்ல. . . இப்படித்தான் என் எண்ணங்கள் இருந்தன. உங்களுக்கும் அப்படித்தான் தோன்றி இருக்கலாம். . ஏதோ ஒரு நிலையில், நம் இருவருக்குமே சரியான பதில்கள் கிடைத்து விட்டன... செயல்பாடுகளில் ஈடுபடுவதே வாழ்க்கையின் ஆதாரம், பொதுஜனங்கள் என்ற அளவில் நம்மால் எதையும் செய்யாமல் இருக்க முடியாது. ஆனால் முடிவுகளை எதிர்பார்ப்பதை வேண்டுமானால் செய்யாமல் விட்டு விடலாம். ஏனென்றால் முடிவுகளே நம்மை எதிர்பார்க்கத் தூண்டுகின்றன. எதிர்பார்ப்பு ஆசைகளைத் தூண்டுகிறது. ஆசைகள் அதற்குப் பிறகு கஷ்ட நஷ்டங்களுக்கும் மாயைகளுக்கும் காரணமாகிறது. செயல்பாடுகளில் ஈடுபடுவதால், நாம் எல்லோரும் கொஞ்சம் காத்திருக்கலாம் என்று நம்மில் ஒரு சிலர் நினைக்கலாம். ஏனென்றால் முடிவுகளைக் கடவுளே கொடுப்பார் என்பதால் அப்படிச் செய்யலாம். .. இன்னொரு எதிர்பார்ப்பும் இருக்கிறது. இது கடவுளைப் பற்றியது. .. உங்கள் க்டமையைச் செய்யுங்கள் முடிவுகளை கடவுளிடம் விட்டு விடுங்கள். .. இது நமக்கு அதைவிட சற்று எளிதானது. நமது வளர்ச்சி பிறருக்கு முக்கியமாக இருக்கும்பொழுது, மற்றும் அதில் நாம் பெருமைப் படாமல் இருக்கும்பொழுது, அந்த வளர்ச்சியுடன் நம்மை பொருத்திப் பார்க்கும்பொழுது, அந்த வளர்ச்சி எந்தவித துன்பத்தையும் கொண்டு வரப்போவதில்லை. தவிரவும், இந்த ஆற்றலோடு இருக்கும் நமக்கு நம் கடமையில் ஒரு அங்கமே அது. அதைச் செய்வது அல்லது அதை தலைமைப் பண்போடு நடத்திச் செல்லும்பொழுது, நாம் நம்மையே அதில் ஆழ்ந்து விடுகிறோம். அது மட்டுமல்ல. ஒரு பொதுஜன அங்கத்தினர் என்ற முறையில் நாம் எல்லோருமே புலன்களின் தேவைகளுக்காகவே எதையும் செய்கிறோம். இருந்தாலும் தேவைப்படும்பொழுது எல்லாம் நம்மை நாமே எதிலிருந்தும் தள்ளி வைத்துக் கொண்டு பார்க்க தெரிய வேண்டும். அந்தக் காரணத்திற்கு நடப்பனவற்றை எல்லாம் கடவுளுக்கே அர்ப்பணித்து விட வேண்டும். அந்தப் பரமாத்மாவிடமே எதையும் விட்டு விட்டு நம்மோடு எதையும் பொருத்திக் கொள்ளக் கூடாது. மீதமுள்ள எல்லாவற்றையும் நாம் பொறுத்துக் கொள்ளலாம். இன்றைக்கு எந்த ஒரு தெளிவுடன் வாழ்கிறார்களோ அதே தெளிவுடன் நாளைக்கும் வாழப் போகிறார்கள் என்று சொல்ல முடியாது. நாம் குழந்தைகளுடன், மனைவியுடன், பெற்றோர்களுடன், சகோதரர்களுடன், நண்பர்களுடன் மற்றும் அந்தவித உபயோகமான செல்வங்களுடன் இருக்கலாம். ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் - அவை எல்லாம் ஒரு நாளைக்கு நம்மை விட்டு நீங்கி விடும். எல்லாமே இந்த வாழ்க்கையை விட்டு நீங்கி விடும். .. ஆனால் நாம் மாத்திரம் கடவுளோடு இல்லாமல் தனித்து விடப் போவதில்லை. . அந்தப் பரமாதமா உங்கள் மனத்திலேயே குடிகொண்டிருக்கிறார். நீங்கள் அவருக்குள் இருக்கிறீர்கள். .. இந்த சக்தியோடு உங்கள் வாழ்க்கையை நடத்துங்கள், உங்கள் கடமைகளைச் செய்து வாருங்கள்... கவலைகளை விட்டு விடுங்கள் மற்றும் உங்கள் பெருமிதத்திலிருந்து, சுயச் செருக்கிலிருந்து மற்றும் எதிர்பார்ப்புக்களிலிருந்து விலக்கிக் கொள்ளுங்கள்."

# முடிவுரை

நீங்களும் நானும், இதைப் படிக்கும்பொழுது, பலவித வியாக்கினங்களைப் புரிந்து கொண்டு விட்டொம். பகவான் கிருஷ்ணரைப் பற்றியும் அர்ஜுனனைப் பற்றியும் நமக்கே உரிய கற்பனைகளாலும் சிந்தித்தோம். ஒரு சிலவற்றை நீங்கள் ஒப்புக்கொண்டீர்கள். ஒரு சிலவற்றை நீங்கள் எதிர்த்தீர்கள். இருந்தும் நம் இருவருமே ஒரு குரலில் ஒன்றுபட்டிருந்தோம். அதாவது நாம் இருவருமே அந்த ஒரே பரமாத்மாவிலிருந்து வந்தோம் என்பதையும், நாம் அந்த பரமாத்மாவின் அங்கங்களே என்பதையும், ஒப்புக் கொண்டோம். இந்த சூழலில் வயது வரம்பு இல்லை, பணமும் ஒரு பொருட்டல்ல. ஒரு அந்தஸ்து என்பது கிடையாது. இதைப் படிப்பதால் அல்லது எழுதும்பொழுதோ அல்லது இதைப் பற்றி வாதிடும்பொழுது, இன்றிலிருந்து நாளைக்கு நாம் மாறிவிடப் போவதில்லை. நாம் செய்துகொண்டிருக்கும் பலவற்றை மீண்டும் மீண்டும் செய்துகொண்டுதான் இருக்கப் போகிறோம். அதே போல்தான் செய்து கொண்டு இருப்போம். அப்படியே எதுவுமே அவரிடமிருந்துதான் வருகிறது என்று உணர்கிரேன். என்னையும் உட்படவே அவரிடமிருந்து வருகிறது என்று உணர்கிறேன். இந்த உணர்வே வாழ்க்கையில் எதிர்ப்படும் பலவற்றை மேலாண்மை செய்ய உதவும். அறிமுகத்தில் நான் ஒரு அடையாளத்திற்காக தேடிக்கொண்டிருப்பதாகச் சொன்னேன். இப்பொழுது அந்தத் தேடல் முடிந்து விட்டது. இப்பொழுது நான் யார் என்பது எனக்கு விளங்கி விட்டது. நான் இப்பொழுது தனிமையாக இருப்பதாக நினைக்கவில்லை. எதிர்காலத்திலும் எந்தவித தனிமையும் என்னை அண்டப் போவதில்லை. நிச்சயம் நான் தனியாக இருக்கப் போவதில்லை என்பதை உணர்கிறேன். உங்களுக்கு என்னுடைய கருத்துக்களிலிருந்து வேறுபட்ட கருத்துக்கள் இருக்கலாம். நல்லது! ஏனென்றால் நான் எழுதியது எல்லாமும் அவர் கொடுத்தவையே. நீங்கள் நினைப்பதும் அவரால் உருவாக்கப்பட்டதுதான். எல்லாவற்றையும் எழுத்தில் சொல்லக் கூடியவரல்ல அவர். இங்கு சொல்லப்பட்டிருப்பவை எல்லாம் நமக்கு தூண்டுகோல்கள். அத்துடன் மட்டுமல்லாமல் உயிரோடு இருக்கும் ஒவ்வொரு உயிரினமும் அவரை தங்களுக்குள் பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அப்படி என்றால், அவர் அங்கிருக்கும் நிலையை விட மேலும் நீங்கள் அவரை வர்ணிக்கலாம். அவர் இங்கிருக்கும் நிலையை விட மேலும் பூஜித்து அறியலாம். எந்தவித முடிவும் இல்லை. இது ஒரு நடந்துகொண்டே இருக்கும் அனுபவம். எப்படி ஒரு கிராமவாசி, உலகத்தையே பார்க்காமல், கிராமத்திலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறாரோ, அப்படியேதான் நானும் பகவத் கீதையை என் வழியிலேயே புரிந்து கொள்ள முயற்சித்தேன். எனக்குத் தெரிந்ததை பிறருடன் பகிர்ந்து கொள்ள முயற்சித்தேன். எத்தனையோ பண்டிதர்கள், உலகம் சுற்றி வந்தவர்கள் இருக்கலாம். அவர்கள் யாவரும் ஒவ்வொரு வரி வரியாகப் படித்துப் புரிந்து கொண்டவர்களாக இருப்பார்கள். ஒவ்வொரு சொல்லாகப் படித்தவர்களாக இருப்பார்கள். . பகவத் கீதையைப் பற்றி ஏராளமான ஆராய்ச்சிகளை மேற்கொண்டவர்களாக இருப்பார்கள். அவர்கள் இந்தத் தொகுப்பில் ஏராளமான தவறுகளைக் கண்டுபிடிக்கலாம். இருந்தாலும், ஒரு கிராமவாசிக்கு, எவருக்கு பறவைகளின் இனிய கூக்குரல்கள் பிடிக்குமோ, அழகான பட்டாம் பூச்சிக்கள் பிடிக்குமோ, ஆரோக்கியமான உணவைச் சாப்பிடுகிறாரோ, அவருக்கு திவி ரேடியோவில் என்ன கொண்டு வருகிறது என்பது தெரியாமல் இருக்.கலாம். கணினியின் இயக்க மொழி பற்றி தெரியாமல் இருக்கலாம். ஒரு விமான பைலட்டின் தொழில்கள் பற்றி தெரியாமல் இருக்கலாம். … இவைபற்றி அவர் கவலைப்பட

வேண்டுமா என்ன? நீங்கள் கடைசியாக எப்படி புரிந்து கொள்கிறீர்கள் என்பதுதான் முக்கியம். அப்படிப் புரிந்து கொண்டு எப்படி வாழ்கிறீர்கள் என்பதும், கடவுளாகிய அவர் உங்களுக்கு ஆசீர்வதித்திருக்கிறார் என்பதுமே அர்த்தமாகும்..!!! "